ஒப்பியன்மொழிநூல்—முதன் மடலம் : 2-ம் பாகம் பிற்பகுதி.

# திரவிடத்தாய்

சென்னை
முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியன்.
பண்டித புலவ வித்துவ கீழ்கலைத் தேர்ச்சியாளன்,
ஞா. தேவநேயன், B.O.L.
எழுதியது.

புரோகிரேசிவ் அச்சுக்கூடம், சென்னை.
பதிப்புரிமை] 1944 [விலை ரூ. 1-12

# முகவுரை

உலக மொழிகளுள் தலைமையானவற்றுள் தமிழும் ஒன்றெனினும், "பல்குழுவும் பாழ்செயும் உட்பகையும்" தமிழகத்திலிருந்துகொண்டு, தமிழின் பெருமையைப் பிற நாடுகள் மட்டுமன்றித் தமிழ்நாடும் அறியாதபடி, அதனை மறைத்து வருவது மிக மிக இரங்கத் தக்கதொன்றாம். ஆராய்ச்சியாளரோவெனின், ஓரிருவர் நீங்கலாக, பிறரெல்லாம், பிறநாட்டுச் செய்திகளாயின் மறைந்த வுண்மையை வெளிப்படுத்துவதும், தமிழ்நாட்டுச் செய்திகளாயின் வெளிப்பட்டவுண்மையை மறைத்துவைப்பதுமே தொழிலாகக் கொண்டுள்ளனர். ஆயினும், கார் காலத்தில் மறைக்கப்பட்ட கதிரவன் திடுமென ஒருநாள் திகழ்ந்து தோன்றுவது போல், தமிழும் ஒருநாள் உலகத்திற்கு வெளிப்படும் என்பதற்கு எட்டுணையும் ஐயமின்று.

தமிழே திரவிடத்தாய் என்பது மிகத் தெளிவாயிருப்பினும், 1891-ம் ஆண்டிலேயே,

> "கன்னடமுங் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
> உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்"

என்று பேராசிரியர் **சுந்தரம் பிள்ளை**யவர்கள் திட்டமாய்க் கூறியிருப்பவும், ஆராய்ச்சியின்மையாலோ, கவலையின்மையாலோ, துணிவின்மையாலோ, தமிழ்ப்புலவர் எடுத்துக் காட்டாததினால், தமிழின் திரவிடத்தாய்மை பொதுமக்களால் அறியப்படாதிருப்பதுடன், தமிழ் ஒரு புன்சிறு புது மொழியினும் தாழ்வாகக் கருதப்படுகின்றது.

பெலுச்சித்தானத்திலும் வட இந்தியாவிலும் இன்னும் திரவிடமொழிகள் வழங்குவதையும், வடநாட்டு ஆரிய மொழிகளிலும் திரவிட நெறிமுறைகளே அடிப்படையாய் அமைந்து கிடப்பதையும், **குச்சரமும்** (குசராத்தி), **மராட்டி**யும் பண்டைக் காலத்தில் **பஞ்சத்திராவிடி**களில் இரண்டாக வடமொழியாளராலேயே கொள்ளப்பட்டதையும், இந்திய மொழிகளிலெல்லாம் மூவிடப் பெயர்களும் முக்கியமான

முறைப்பெயர்களும் தமிழ்ச் சொற்களாய் அல்லது தமிழ் வேரடிப் பிறந்தனவாயிருப்பதையும், சென்ற நூற்றாண்டில் தெலுங்கு நாட்டிற்கும் கன்னட நாட்டிற்கும் சென்ற தமிழ்க் குறவர் (எறுக்கலவாரு அல்லது கொரவரு) கூட, இன்று தமிழைத் தெலுங்கும் கன்னடமும் போல ஒலித்துப் பேசுவதையும், நோக்குமிடத்து,தமிழிற் புணர்ச்சியும் பகு சொன்னிலையும் தோன்றாத தொன்முது காலத்தில், தமிழே இந்தியா முழுதும் தனிப் பேராட்சி பெற்றிருந்தமை புலனாம்.

தட்ப வெப்ப நிலையினாலும், ஒலிமுறைச் சோம்பலி னாலும், இலக்கிய விலக்கண அணைகரையின்மையாலும், ஆரியக் கலப்பினாலும், தமிழர் விழிப்பின்மையாலும், நாவலந் தீவு முழுவதும் ஒரு தனியாய் வழங்கிய முதுபழந்தமிழ், பல்வேறு மொழிகளாய்ப் பிரிந்து, வடநாட்டில் ஆரிய மயமாயும் தென்னாட்டில் ஆரியக் கலப்பினதாயும் வேறு பட்டதுடன், ஆரியச்சார்பு மிக்க திரவிட மொழிகள் மேன் மேலும் தமிழை நெருக்கி நெருக்கித் தெற்கே தள்ளிக் கொண்டே வருகின்றன.

> "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமுந்
> தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"

என்னும் இளங்கோவடிகள் கூற்றால், கி. பி. 2-ம் நூற் றாண்டுவரை வேங்கடத்தை வடவெல்லையாகக்கொண்ட தென்னாடு முழுதும் பிறமொழி வழங்காத தமிழ்நாடா யிருந்தமை புலனாம். ஆனால், 12-ம் நூற்றாண்டில் சேர நாட்டின் வடபாகத்திற் கன்னடம் புகுந்துவிட்டது. இதை,

> "வெள்ளா றதுவடக்கா மேற்குப் பெருவழியாம்
> தெள்ளார் புனற்கன்னி தெற்காகும்—உள்ளார
> ஆண்ட கடல்கிழக்கா மைம்பத் தறுகா தம்
> பாண்டிநாட் டெல்லைப் பதி"

> "கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
> குடதிசையிற் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
> ஏனாட்டுப் பண்ணை யிருபத்து நாற்காதம்
> சோனாட்டுக் கெல்லையெனச் சொல்."

" மேற்குப் பவளமலை வேங்கட நேர்வடக்காம்
ஆர்க்கு முவரி யணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம்
**நற்றெண்டை** நாடெனவே நாட்டு."

" வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைக்கோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதம்
**சேரநாட்** டெல்லையெனச் செப்பு."

என்னும் **கம்பர்** செய்யுட்களானறிக.

இற்றைநிலையிலோ, சேரநாட்டின் மேல்பாகம் முழுதும் மலையாள நாடாயும் கீழ்பாகத்தின் வடபகுதி கன்னட நாடாயும் மாறியிருப்பதுடன், சோழநாட்டின் வடமூனைப் பகுதி (தொண்டை நாட்டுப் பல்குன்றக் கோட்டம்) தெலுங்கிற் கிடந்தந்து இருமொழி நாடாய் வேறுபடு கின்றது.

உண்மையில் ஒரு பெருமையுமில்லாத புன்சிறு புது மொழிகளை யெல்லாம் அவ்வம்மொழியார் பலபடப் பாராட்டி வளர்த்து வருகையில், பல வகையில் தலை சிறந்த தனிப்பெருந் தாய்மொழியாகிய தமிழைத் தமிழர் நெகிழ விடுவதும், எங்கெழிலென் ஞாயிறெமக்கென்றிருப் பதும், தமிழப் பிறப்பிற்கு முற்றும் தகாத செய்தியாம்.

தமிழையும் பிற திரவிட மொழிகளையும் ஆராய்வதால் தமிழின் சிறப்பையும் பழந்தமிழரின் பெருமையையு மறிவ துடன், உலக முழுதுந் தழீஇய குலநூல் (Ethnology) வரலாற்றுநூல் (History), மொழிநூல் (Philology) ஆகிய முக்கலைகளின் திறவுகோலையும் காணப் பெறுவதாயிருத்த லின், இனிமேலாயினும் தமிழர் தம் கடமை யுணர்ந்து கடைப்பிடிப்பாராக.

எனது **ஒப்பியன்மொழி நூலின்** முதன் மடல 2-ம் பாகத் தின் பிற்பகுதியாய் வெளிவரும் இந்நூல், தமிழே திரவிடத் தாய் என்று நாட்டவெழுந்தது. இதை நடுவுநிலையாய்ப் படிப்பார்க்கெல்லாம் இவ்வுண்மை புலனகுமென்பது திண்

ணம். ஒரு மொழிக்கு அடிப்படையானவும் இன்றியமையா தனவுமான, மூவிடப்பெயர்கள், முறைப்பெயர்கள், தட்டு முட்டுப்பெயர்கள், அக்கம் பக்கப் பொருட்பெயர்கள், பேரிடப் பெயர்கள். வா, போ முதலிய முக்கிய வினைகள் பல்வகைப் பண்புப்பெயர்கள், கை கால் முதலிய சினைப் பெயர்கள், ஆகிய இவை, இயற்கையான வடிவினும் வேர்ப்பொருள் தாங்கியும் எம்மொழியிலுள்ளனவோ, அம்மொழியே அதற்குத் தாய் எனத் துணிதல் வேண்டும்.

ஆரியவெழுத்துப்போல் எடுத்தும் உரப்பியும் ஒலிக்கும் மூச்செழுத்துக்களும் ஓசையெழுத்துக்களும் (Aspirated and Voiced Letters) தமிழுக்கின்மையின், தமிழுக்குரிய பொதுவெழுத்துக்களாலேயே பெரும்பாலும் பிற திரவிடச் சொற்கள் காட்டப்பட்டுள்ளன. பிற திரவிடமொழிகளி லுள்ள தமிழ்ச் சொற்களையெல்லாம் எடுத்தெழுதின பல அகராதிகளாக விரியுமாதலின், எடுத்துக்காட்டுக்கு வேண் டிய அளவான சொற்களே இங்கு காட்டப்படுகின்றன வென அறிக.

இந்நூலின் திருத்தம்பற்றிய கருத்துக்களை அறிஞர் தெரிவிப்பின், அவற்றை நன்றியறிவுடன் ஏற்றுக்கொண்டு, அடுத்த பதிப்புக்களிற் பயன்படுத்தும் வாய்ப்புடையே னாவேன்.

> "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல்."

> "குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
> கற்றறிந்த மாந்தர் கடன்."

சென்னை,
27—1—1944.

ஞா. தே.

# பொருளடக்கம்

## திரவிட மொழியார் தொகை (1931)

| | | |
|---|---|---|
| தமிழர் | 20,412,652 | |
| தெலுங்கர் | 26,373,727 | |
| கன்னடர் | 11,206,380 | |
| மலையாளியர் | 9,137,615 | |
| துளுவர் | 500,000 | (1871) |

## குறுக்க விளக்கம் (Abbreviations)

| | |
|---|---|
| ஆ. பா. - ஆண்பால் | நி. கா. - நிகழ்காலம் |
| இ. கா. - இறந்தகாலம் | நற். - நற்றிணை |
| எ. கா. - எதிர்காலம் | நன். - நன்னூல் |
| எ. டு. - எடுத்துக்காட்டு | ப. - பன்மை |
| ஏ. - ஏவல்வினை | பக். - பக்கம் |
| ஒ. - ஒருமை | பத். - பத்துப்பாட்டு |
| க. - கன்னடம் | புறம். - புறநானூறு |
| சிலப். - சிலப்பதிகாரம் | பெ. பா. - பெண்பால் |
| த. - தமிழ் | ம. - மலையாளம் |
| தொல். - தொல்காப்பியம் | மயிலே. - மயிலைநாதர் |
| தெ. - தெலுங்கு | வி. எ. - வினையெச்சம் |

## கருவிநூற்பட்டி—Bibliography


1. A Comparative Grammar of the Dravidian Languages. By R. Caldwell.
2. Linguistic Survey of India. By Grierson.
3. A Progressive Grammar of the Malayalam Language. By L. J. Frohnmeyer.
4. Tamil Studies. By S. Srinivasa Iyengar.
5. A Kanarese Grammar. By Harold Spencer.
6. A Progressive Grammar of the Telugu Language. By A. H. Arden.
7. A Companion Telugu Reader. By A. H, Arden.
8. A Grammar of the Tulu Language. By J. Brigel.

# திரவிடத் தாய்

## முன்னுரை

**1. மொழி என்றால் என்ன?** ஒரு வகுப்பார் அல்லது நாட்டார் தம் கருத்தைப் பிறர்க்குப் புலப்படுத்தற்குக் கருவியாகக் கொள்ளும் ஒலித்தொகுதியே மொழியாம். அவ்வொலி சொல்லுஞ் சொற்றொடருமாயிருக்கும். சொல் லும் ஓரெழுத்துச் சொல் ஈரெழுத்துச் சொல் முதலியவாகப் பலவகைத்து.

ஓர் ஒலி வேறு; அதனால் உணர்த்தப்படும் பொருள் வேறு. ஒலிக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பு வரிவடி வெழுத்திற்கும் ஒலிவடி வெழுத்திற்கும் உள்ளதே. காற்று இயங்குவதினாலும் இரு அல்லது பல பொருள்கள் ஒன்றோ டொன்று உராய்வதனாலும் ஓசை பிறக்கும். அவ்வோ சைக்கு இயல்பாய்ப் பொருளில்லை. அவ்வோசையைப் பொருளுணர்த்தும் அடையாளமாகக் கொண்டதே மொழி யாம். காற்றியக்கம் வெள்ளிடையியங்குவதும் உயிரி (பிராணி)களின் வாய்வழி இயங்குவதும் என இருவகைத்து. இவற்றுள், பின்னதன் பயனாய ஒலிகளே பெரும்பாலும் மொழிக்கருவியாம். ஒலிக்கு இயல்பாய்ப் பொருளுணர்த் தும் தன்மையிருப்பின், உலகமெங்கும் என்றும் ஒரு மொழியாயும் அதுவும் கல்லாமலே அறியப் படுவதாயுமிருக் கும். அங்ஙனம் இன்மையறிக.

மொழிநூலின் திறமறியாத சிலர், ஓசை நிலைப்பானது; ஆகவே ஓசைவடிவான மொழிகளும் நிலைப்பானவை என்று கூறுவர். இது, இரும்பு நிலைப்பானது; ஆகவே இரும்புவடிவான இயந்திரங்களும் நிலைப்பானவை; புதிதா யுண்டாயவையல்ல என்று கூறுவது போன்றதே.

ஒவ்வொரு நாட்டாரும் பெரும்பாலும் வெவ்வேறு மொழியைப் பேசிவருகின்றனர். ஒரு நாட்டார் மற்றொரு நாட்டாரின் மொழியைக் கற்றாலொழியப் பேசமுடியாது. ஒரு நாட்டாருள்ளும் குழந்தைகள் பெரியோர் வாயிலாய்க் கேட்டாலொழியத் தம் தாய்மொழியைப் பேசமுடியாது. குழவிப் பருவத்திலேயே தம் நாட்டாரினின்று பிரிக்கப் பட்டு மொழி வழங்காத அல்லது தாய்மொழிவழங்காத இடத்தில் நிலையாய் வாழ்ந்தவர்கள் தாய்மொழியைப் பேச முடியாது. முழுச்செவிடர் பிறர் பேசுவதைக் கேட்க இயலாமையாலேயே பெரும்பாலும் ஊமையராகின்றனர். விலங்குகளையும் பறவைகளையும் போன்று, மிகச்சில ஒலிகளால் மிகச்சில கருத்துக்களைத் தெரிவித்துக் கொண்டு தமக்கென மொழியில்லாத அநாகரிக மக்களும் சில காடுகளில் வாழ்கின்றனர். ஒவ்வொரு நாட்டிலும் மக்களின் நாகரிக வளர்ச்சிக்கேற்ப மொழியும் வளர்ந் துள்ளது.

ஒருவனுக்குப் பிறப்பிலேயே தாய்மொழி யறிவில்லை ; அதைப் பேசுந்திறன் அல்லது கற்குந்திறன் மட்டுமுண்டு. ஓராண்டுக் குழந்தை 'அம்மா' 'அப்பா' 'பாச்சி' (பால்) 'சோச்சி' (சோறு) முதலிய பெயர்களையும், ஒன்றரை யாண்டுக் குழந்தை அவற்றொடு 'வா' 'போ' முதலிய வினைகளையும், ஈராண்டுக் குழந்தை தன் கருத்திற்குரிய சொற்க ளெல்லாவற்றையும் சொல்லக் கற்றுக்கொள்கிறது, அல்லது கற்பிக்கப் படுகிறது. மூவாண்டுக் குழந்தை நன்றாய்ப் பேசுகிறது; பின்பு வீட்டை விட்டு வெளியேறிப் பொருள்களையும் செய்திகளையும் அறிய அறியச் சொற்றொகு தியும் பெருகி வருகிறது ; அதன்பின் கல்வியினால் பல சொற் கள் புதிதாய் அறியப்படுகின்றன. இங்ஙனம் ஒருவன் வளர வளர, அறிவு பெருகப் பெருக, தன் சொற்றொகுதியை மிகுத்துக் கொண்டே போகின்றான். ஒரு குழந்தை தன் பெற்றோரிடத்தினின்று பேசக் கற்றுக் கொண்டாற்போல, ஒரு நாட்டார் தம் முன்னோரிடத்தினின்று பேசக் கற்றுக் கொள்கின்றனர்.

மேற்கூறிய காரணங்களால், மாந்தன் ஒரு காலத்தில் மொழியில்லாதிருந்தான் என்பதும், மொழி யமைந்த பின் வழிவழி பின்னோரெல்லாம் முன்னோரிடத்தினின்று மொழியைக் கற்று வருகின்றனர் என்பதும் உய்த்துணரப் படும்.

உலகிலுள்ள மக்களெல்லாம் ஓரிடத்தினின்றே பரவிப் போயினர் என்பதும், ஒரு தாய்வயிற்றினரே என்பதும் ஆராய்ச்சியாற் கண்ட முடிபுகளாம். மாந்தன் முதலாவது தோன்றிய இடத்தில் மக்கள் மொழியில்லாமலே சிலகாலம் வாழ்ந்துவந்தனர். மொழியில்லாத நிலையில் சில முறையும் மொழி தோன்றியபின் சிலமுறையுமாக மக்கள் பலதிசைக்கும் பல முறை பரவிப் போயிருக்கின்றனர். மொழியில்லாது பிரிந்துபோனவர் தாம் போன இடங்களில் புதிதாய்த் தத்தமக்கு ஏற்றவாறும் இயன்றவாறும் இயன்மொழிகளை ஆக்கிக் கொண்டனர். மொழி தோன்றியபின் பிரிந்துபோனவர் தத்தம் சுற்றுச்சார்பிற் கேற்பப் புதுச் சொற்களை அமைத்தும் தட்ப வெப்ப நிலைக்கேற்பப் பழஞ் சொற்களைத் திரித்துங் கொண்டனர். ஆயினும், தொடர்புடைய மக்களெல்லாம் தொடர்புடைய மொழிகளைப் பேசி வருவதும், மக்கள் தொடர்பின் பெருமை சிறுமைக் கேற்ப அவர்கள் மொழிகளின் தொடர்பும் மிக்கும் குறைந்து மிருப்பதும் இயல்பாம். இதற்கு, அமெரிக்க நீகிரோவரைப் போல அநாகரிக மொழியராயும், கோவாப் போர்த்துக்கீசியரைப் போலச் சிறுபான்மை யராயு மிருந்து, அயன் மொழிகளைக் கடைப்பிடிப்பது விலக்காம். வேறு சில விலக்குகளு முள; அவை வேண்டுமிடத்துக் கூறப்படும்.

(2) **தமிழ்மொழி எது?** பனிமலை தோன்றுத முதற் காலத்தில் நாவலந்தேய முழுதும், தொல்காப்பியர் காலத்தில் வேங்கடத்திற்கும் (தெற்கே யமிழ்ந்து போன) குமரி மலைக்கும் இடையிலும், வழங்கிவந்து, தற்போது வேங்கடத்திற்கும் குமரி முனைக்கும் இடையில் மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் மைசூர்ச் சீமைக்கும் கிழக்கில் வழங்கிவருவது தமிழ் மொழியாம்.

(3) **தமிழ் என்னும் பெயர்.** தமிழ் என்னும் பெயர்க்குப் பொருத்தமான பொருள்கள் தனிமையாக ழகரத்தைக் கொண்டது, (2) தனிமை என இரண்டு. இவற்றுள், முன்னது பொருளாயின் உலகில் பிறமொழி அல்லது மொழிகள் தோன்றின அல்லது திரிந்த பின்னும் தமிழில் ழகரந்தோன்றின பின்னும் தமிழுக்குப் பெயர் ஏற்பட்டிருத்தல்வேண்டும். பின்னது பொருளாயின் தமிழ் என்னும் பெயர் முதலிலேயே தமிழையோ முதலாவது தமிழர்க்குப் பெயராகிப் பின்பு தமிழையோ குறித்திருத்தல்வேண்டும். இதுவும் பிறநாடும் பிறமொழியும் தோன்றிய பின்னரே நிகழ்ந்திருத்தல்கூடும். பல மொழி வழங்காதபோது ஒரு மொழிக்குமட்டும் சிறப்புப் பெயர் அமைதல் அரிது. இவ்வியல்பு பிற பொருள்கட்கும் ஏற்கும். தனிமை என்று பொருள்படும் தமிழ் என்னுஞ் சொல் முதலாவது தமிழரைக் குறித்திருப்பது அவரின் தனிப்பட்ட நாகரிகம் பற்றி. பண்டைக் காலத்தில் நாவலந்தேயத்தில் (இந்தியாவில்) மட்டுமல்ல, உலக முழுவதிலுமே தமிழர் தலை சிறந்த நாகரிகராயிருந்ததினால் தனிப்பட்டவர் என்னும் பொருளில் தமிழர் எனப்பட்டனர். பழந்தமிழரின் நாகரிகத்தை, அவருடைய பழக்கவழக்கம், சிறந்த கருத்துக்கள், செய்யுள்வன்மை, அவர் செய்திருந்த பொறிகள், தமிழின் அமைதி, முத்தமிழ்ப் புணர்ப்பு, தமிழ்க் கலைநூல்கள், முதலியவற்றால் அறியலாம். அவரது சிறந்த ஒழுக்கத்தினாலேயே,

> " வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத்
> **தமிழ் கூறும் நல்லுலகத்து** "

எனப் பண்டைத் தமிழகத்தைப் பாராட்டிக் கூறினர் பனம்பாரனாரும்.

> " நாடா கொன்றோ காடா கொன்றோ
> அவலா கொன்றோ மிசையா கொன்றோ
> எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே "

என்றார் ஔவையாரும்.

ஒரு குலத்தாரின் அல்லது நாட்டாரின் பெயர் திரிந்தும் திரியாதும் அவரது மொழியைக் குறிப்பது இயல்பே. ஆங்கிலரது (Angles) மொழி ஆங்கிலம் (English) என்றும் செருமனியரது (Germans) மொழி செருமனியம் (German) என்றும் கூறப்படுதல் காண்க

தமிழ் என்னும் சொல் தனிமை என்று பொருள்படும் போது, அதன் முகரம், அமிழ் இமிழ் உமிழ் குமிழ் என்ப வற்றிற் போல ஒரு விகுதியாம்.

தமிழ் இனிமையா யிருத்தலின், தமிழ் என்னுஞ் சொல்லுக்கு இனிமைப் பொருள் கூறுவர். இது வழிப் பொருளேயன்றி வேர்ப்பொருளன்று.

**(4) குமரி நாடே (Lemuria) தமிழ் (திரவிடம்) தோன்றிய இடம் என்பது.**

உலகில் இதுபோது திரவிடமிருப்பது இந்தியாவே; இந்தியாவிலும் திரவிடத்திற்குச் சிறந்தது தென்னாடே; தென்னாட்டிலும் சிறந்தது தமிழ்நாடே; தமிழ் நாட்டிலும் மொழித் திருத்தம் தெற்கு நோக்கியதே.

முத்தமிழ் நாடுகளில் பாண்டி நாட்டையே தமிழ் நாடென்றும், முத்தமிழரசருள் பாண்டியனையே தமிழ் நாடன் என்றும், பண்டைக் காலத்திலேயே சிறப்பித்துக் கூறினர். இன்றும் பாண்டிநாட் டெல்லையில்தான் தமிழின் வளத்தையும் தூய்மையையும் ஒரு சிறிது காண லாம்.

பாண்டி நாட்டின் பெரும்பகுதி ஈராயிரம் ஆண்டு கட்கு முன்னரே சிறிது சிறிதாகத் தென்பெருங் கடலில் மூழ்கிவிட்டது. பாண்டியர் இரீஇய முக்கழகங் (முச்சங் கங்)களும் நீடித்த காலத்தன, நெட்டிடை யிட்டன.

**இறையனாரகப் பொருளுரையில்,** முக்கழகவரலாற்றில், "கடைச்சங்க மிருந்து............தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற்றைம்பதிற்றியாண்டு என்ப....சங்கமிரீஇயினார்

கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திரு மாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத் தொன்பதின்மரென்ப........தமிழாராய்ந்தது உத்தர மதுரை யென்ப."

"....இடைச்சங்க மிருந்தார்...........மூவாயிரத் தெழுநூற்றி யாண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்கமிரீஇயினர் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திரு மாற னீறாக ஐம்பத் தொன்பதின்மரென்ப.......அவர்....தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டியனுட்டைக் கடல் கொண்டது.

"தலைச்சங்க மிருந்தார்........நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்க மிருந்தாரென்ப அவர்களைச் சங்கமிரீஇயினர் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்ம ரென்ப....அவர்...தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை யென்ப." என்று கூறப்பட்டுள்ளது.

தமிழ் நூல்களைக் கல்லாமலே—பன்னூறாயிரம் ஆண்டுகட்கு முன்னே குமரி முனைக்குத் தெற்கே, இந்தியா தென்கண்டம் (ஆஸ்திரேலியா) ஆப்பிரிக்கா என்ற மூன்று கண்டங்களையும் இணைத்துக் கொண்டு ஒரு பெரு நிலப் பரப்பிருந்த தென்றும், அங்கேதான் மாந்தன் தோன்றினானென்றும், ஊரும் உயிரிகள்கூட அங்கேதான் தோன்றினவென்றும், அது பன்னூறாயிரம் ஆண்டுகள் நிலைபெற்றபின் பல கடல்கோள்களால் தென் பெருங்கடலில் மூழ்கி விட்டதென்றும், ஹெக்கேல், ஸ்காட் எலியட் முதலிய மேலையாராய்ச்சியாளர் கூறி, அதற்கு லெமுரியா, காண்டுவானா (Gondwana) என்ற பெயர்களையும் இட்டிருக்கின்றனர்.

"வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லில்"

என்னுங் குறளுரையில், பழங்குடிக்கு எடுத்துக் காட்டாக, "சேர சோழ பாண்டியர் குடிபோலும் படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டு வருங்குடி" எனக் குறிப்பிட்டுள்ளார் பரிமேலழகர்.

முத்தமிழரசக் குடிகளுள் பாண்டியர் குடியே முதலாவது தோன்றிய தென்றும், பின்பு முறையே சோழ சேரக் குடிகள் தோன்றின வென்றும் ஒரு வழிமுறைச் செய்தி வழங்கி வருகின்றது.

வடமொழியில் முதற் பாவிய (காவிய) மாகிய வான்மீகி யிராமாயணத்தில் சேர சோழ பாண்டியர் மூவரும் கூறப்பட்டுள்ளனர்.

கி. மு. 2000 ஆண்டுகட்கு முன் எழுதப்பட்ட **தொல்காப்பியத்**திலேயே, "போந்தே வேம்பே ஆரென வரூஉம், மாபெருந் தானையர் மலைந்த பூவும்" (பொ. 60) என்றும், "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்" (பொ. 391) என்றும் மூவேந்தர் குடிகளும், முதுகுடி எனத் தமிழ் மறவர் குலமும் பழைமையாகக் கூறப்பட்டுள்ளன. மறவர்குடியை,

> "கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
> முற்றோன்றி மூத்த குடி"

என்னும் **புறப்பொருள் வெண்பா மாலை (35)**யும்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தலைக்கழகம் முத்தமிழ்க் கழகமாயிருந்ததினால், அதற்கு முன் முத்தமிழ் தொகுதற்கும் அதற்குமுன் இயற்றமிழ் தோன்றற்கும், அதற்குமுன் இலக்கணமும் அதற்குமுன் இலக்கியமும் அதற்குமுன் எழுத்தும் அதற்குமுன் மொழியும் தோன்றற்கும் கணக்கிட முடியாத காலஞ்சென்றிருத்தல் வேண்டும். பொருளதிகாரத்தில் கூறப்படும் ஐந்திணை நிலையும் 'தழை கொண்டு சேறல்' 'இயற்கைப் புணர்ச்சி' முதலிய பகுதிகளும், தமிழர் துவக்கந் தொட்டுத் தென்னாட்டிற்கே உரியர் என்பதை உணர்த்தும். தமிழ் இயல்பாய்த் தோன்றிய மொழியாதலானும், தெற்கிருந்து வடக்கு நோக்கியே திரிந்து செல்லுதலானும், மிகத் தொன்மைவாய்ந்ததாதலானும், அது தோன்றியது குமரிநாடே என்று துணியப்படும்.

பழந்தமிழர் தம் முன்னோரைத் தென்புலத்தார் என்றமையாலும், தெற்கே அமிழ்ந்துபோன குமரிநாடே தமிழர் தொல்லகம் என்பதுணரப்படும். எதிர்த் திசைகளைக் குறிக்கும்போது கிழமேல் தென்வடல் என்று கூறுவதே மரபு; மேல்கிழக்கு வடதெற்கு என்று கூறுவது மரபன்று. நாகரிக மக்கள் கீழிருந்தே மேற்செல்ல வேண்டியிருப்பதாலும், கதிரவன் கிழக்கே தோன்றி மேற்கே மறைவதாலும் கிழக்கு முற்கூறப்பட்டது. தமிழர் தெற்கிருந்தே வடக்கு வந்தவராதலின் தெற்கு முற்கூறப்பட்டது என்க.

(5) **தமிழம் என்னும் பெயரே திரவிடம் எனத் திரிந்தது என்பது.** பண்டைக் காலத்தில் நாட்டுப் பெயர்களும் மொழிப்பெயர்களும் பெரும்பாலும் 'அம்' ஈறு பெற்றே வழங்கின. எ. டு: சிங்களம், கடாரம், ஆரியம். தமிழும் 'தமிழம்' என வழங்கிக் குலத்தையும் நாட்டையும் மொழியையுங் குறித்தது. தமிழக் கூத்து தமிழ வண்ணன் என்னும் புணர்மொழிகளில், தமிழ் என்னுஞ்சொல் அகரச் சாரியை பெற்றுப் புணர்ந்ததென்று கொள்வதைவிட, தமிழம் என்னுஞ் சொல்லே நிலைமொழியாக நின்று ஈறு கெட்டுப் புணர்ந்ததென்று கொள்வது சாலச் சிறந்தது. தமிழம் என்பது குலமும் நாடும் மொழியும் ஆகிய மூன்றையும் குறிக்குஞ் சொல்லாதலின், தெளிவின் பொருட்டு நாட்டைக் குறிக்கும் போது தமிழகம் என வழங்கினர்.

"வையக வரைப்பில் தமிழகங்கேட்ப (புறநா. 168,18). தமிழகம் என்னும் பெயரையே பண்டைக்கிரேக்க உரோம சரித்திராசிரியர் 'டமிரிக்க' (Damirica) 'டமரிக்கெ' (Damarice) எனத் திரித்து வழங்கினர்.

வட நாட்டு ஆரிய (சமஸ்கிருத) நூல்களில் திரவிடம் என்னும் சொல் முதலாவது த்ரமிளம் என்றே வழங்கி வந்தது. ழகரம் வடமொழியிலில்லை. சில உயிர்மெய்ம் முதல்களை ரகாஞ் சேர்த்து, த்ர ப்ர எனப் புணரெழுத்துக்களாகத் திரிப்பது வட நூலார் வழக்கம். எ.டு: படி-ப்ரதி, பவளம்-ப்ரவாளம். இதனால், தமிழம் என்னுஞ்சொல் த்ரமி

ளம் எனத்திரிந்தது இயல்பே. பின்பு அது நாளடைவில் த்ரமிடம் த்ரவிடம், எனத்திரிந்தது. ள—ட, ம—வ, போலி. த்ரவிடம். என்பது மெய்ம் முதலாதலின் தமிழில் திரவிடம் என்றாகிப் பின்பு திராவிடம் என நீண்டு வழங்குகின்றது.

கால்டுவெல் கண்காணியார் குமரிநாட்டுச் சரித்திரத்தையும் தொல்காப்பியத்தையும் மேற்கணக்கு நூல்களையும் அறியாதவராதலின், தமிழரை வடக்கிருந்து வந்தவராகவும் ஆரியரால் நாகரிகமடைந்தவராகவும் கொண்டு, த்ரமிளம் என்னும் வடசொல்லினின்று தமிழ் என்னுஞ் சொல் பிறந்ததென்று கூறினர். ஆனல், பண்டிதர் கிரையர்சன் இதை மறுத்துத் தமிழம் என்பதே த்ரவிடம் என்பதன் மூலம் எனத் தமது இந்திய மொழியாராய்ச்சி (Linguistic Survey of India) என்னும் நூலில் நாட்டியுள்ளார். ஆண்டுக் காண்க.

தமிழுக்குத் திரவிடம் என்னும் பெயர் தமிழ் நாட்டில் வழங்காமையானும், தமிழ் என்னும் வடிவத்தை யொட்டிய பெயர்களே மேனுட்டிலும் வடநாட்டிலும் பழங்காலத்தில் வழங்கி வந்தமையானும், திரவிட மொழிகளெல்லாம் ஒரு காலத்தில் தமிழாகவே யிருந்தமையானும், தமிழம் என்னும் பெயரே திரவிடம் எனத் திரிந்தது என்று தெளியப்படும்.

## (6) தமிழே பிற திரவிட மொழிகளாகத் திரிந்தமை.

தமிழ் என்னும் பெயர் எங்ஙனம் திரவிடம் என்று திரிந்ததோ, அங்ஙனமே தமிழாகிய மொழியும் பிற திரவிட மொழிகளாய்த் திரிந்த தென்க.

தலைக்கழகக்காலத்தில், தமிழ், செந்தமிழ் கொடுந்தமிழ் என இரண்டாக வகுக்கப்பட்டது. இவை வழங்கும் நாடுகளும் செந்தமிழ் நாடு கொடுந்தமிழ் நாடு எனப்பட்டன. செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரு நாடுகள் கொடுந்தமிழ் நாடுகளாயிருந்தன.

இலக்கணம் நிரம்பிய சிறந்த வழக்கான தமிழ் செந்தமிழ். அது திரிந்தது கொடுந்தமிழ். செம்மை நேர்மை;

கொடுமை வளைவு. செங்கோல் கொடுங்கோல் என்னுஞ் சொற்களை நோக்குக.

செந்தமிழ்ச் சொற்கள், இயற்சொல் (Primitives), திரிசொல் (Derivatives) என இரண்டாக வகுக்கப்பட்டன. இயல்பான சொல் இயற்சொல்; அதினின்று திரிக்கப்பட்ட சொல் திரிசொல். கிள் சேர் என்பன இயற் சொற்கள்; கிள்ளை சேரி என்பன திரிசொற்கள். இயற்சொல் வேறு, வேர்ச்சொல் வேறு, பகுதியும் வேறு. கிள் என்பதற்கு **கில்** என்பதும் சேர் என்பதற்கு **சே** என்பதும் வேர்ச் சொற்களாம். வேர்ச் சொல் முந்தினது, இயற்சொல் பிந்தினது. இற்றை யியற்சொற்கள் தோன்றாத முதற்காலத்தில் வேர்ச்சொற்களே இயற்சொற்களாயும் இயற் சொற்களே, திரிசொற்களாயுமிருந்தன. வேர்ச்சொற்கள் (1) ஆணிவேர்ச் சொற்கள் (Primary Roots), (2) பக்கவேர்ச் சொற்கள் (Secondary Roots), (3) சல்லி வேர்ச்சொற் சொற்கள் (Tirtiary Roots) என மூவகைப்படும் வேர்ச் சொற்கட்கும் மூலமான **விதைச்சொற்கள்** என்பன உண்டு. அவையே **சுட்டு விளக்கத்திற்** கூறப்பட்ட ஐஞ்சுட்டுகள். பகுதி என்பது வேர்ச் சொல்லாயும் இயற் சொல்லாயும் திரிசொல்லாயும் இவற்றின் மிகைபாடாயும் பகு சொல்லின் முதனிலையாயிருப்பது. இவற்றிற் கெடுத்துக்காட்டுகளை, முறையே, கில்லினன் கிள்ளினன் கிளைத்தான் கிளைப்பட்டான் என்னும் பகுசொற்களிற் காண்க. இவற்றின் நுட்பங்கள் **செந்தமிழ்ச் சொல்லியல் நெறிமுறைகள்** என்னும் நூலில் விளக்கப்படும். இங்ஙன மெல்லாம் சொன் மூலங்களை அடிநிலை வரைக்குமே ஆராய்ந்து செல்லத் தமிழில்தான் இயலும். ஆரிய நூல்களில் வேர்ச் சொற்களாகக் காட்டப்படுவவற்றிற் பல திரிசொற்களும் அவற்றின் திரிபுகளுமேயென்றறிக.

கொடுந்தமிழ்ச் சொற்கள் செந்தமிழ் நாட்டைச் சூழப் பல திசையிலும் வழங்கினமையின் திசைச் சொற்களெனப்பட்டன.

மேற்கூறிய இயற்சொல் திரிசொல் திசைச்சொல் என்னும் மூன்றுடன், இடைக்கழகக் காலத்தில் புதிதாய் வந்து

வழங்கிய ஒரு சில வடசொற்கள் தமிழிற் கலந்த அயன் மொழியென்ற வகையில் வடசொற்களென்றே கூறப்பட்டன. அக்காலத்தில் தமிழிற் கலந்த அயன்மொழி வடமொழியொன்றே. இம் முறைப்படி இக்காலத்திலும், தமிழிற் கலந்த ஆங்கிலச் சொல் போர்த்துக்கீசியச்சொல் முதலியவற்றை அவ்வம் மொழிப் பெயரால் ஆங்கிலச் சொல் போர்த்துக்கீசியச்சொல் எனக் கூறல் வேண்டு மேயன்றித் திசைச் சொற்களெனக் கூறுதல் கூடாது. இது போது கிளைமொழிகளாய் அல்லது இனமொழிகளாய்ப் பிரிந்து போயுள்ள தெலுங்கு கன்னடம் முதலியவை யெல்லாம், பழங்காலத்தில் கொடுந்தமிழாயிருந்ததினாலே யே, கொடுந்தமிழுக் கெடுத்துக்காட்டாகக் கூறப்பட்டன என்பதை மறத்தல் கூடாது. கொடுந்தமிழ்ச் சொற்கள் அல்லது திசைச் சொற்கள். மூவகைப்படும். அவை யாவன :—

(1) பொருள் திரிந்த சொல்.
எ.டு : செப்பு (தமிழ்)=விடைசொல்; செப்பு (தெலுங்கு) =சொல்.

(2) வடிவு திரிந்த சொல்.
எ.டு : போயினன் (த.)—போயினாடு (தெ.)

(3) புதுச்சொல்.
எ.டு : அடுகு (தெ.)=கேள்.

புதுச்சொல்லும் மறைந்த வேர்ச்சொல் [அம்மு (தெ.)=வில்] மறையா வேர்ச்சொல் [அள்(காது)—அடுகு] என இரு வகைப்படும். இங்ஙனம் மூவகைப்பட்ட திசைச்சொற்கள் மிகுந்த அல்லது கலந்த தமிழ் கொடுந்தமிழாம்.

தொல்காப்பியர்,

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே."

"அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாஅமை யிசைக்குஞ் சொல்லே."

"ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி."

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினுந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி."

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே."

(சொல். 1, 2, 3, 4, 5.)

என்று கூறியிருப்பதால், நால்வகைச் சொல்லுள் வடசொல் அயற்சொல் என்பதும், திசைச்சொல் கொடுந்தமிழ் என்பதும், ஏனையிரண்டும் செந்தமிழ் என்பதும், அறியக்கிடத்தல் காண்க.

செந்தமிழ் நிலம் "வைகையாற்றின் மேற்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்" என்று இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய பிற்கால உரையாசிரியர் உரைத்தனர். இதில், வைகையாற்றின் தெற்குள்ள சிறந்த செந்தமிழ் நிலப்பகுதி விலக்கப்பட்டிருப்பதனாலும், பழங்காலத்தில் சேரசோழ பாண்டிய முத்தமிழ் நாடுமே செந்தமிழ் நிலமாயிருந்ததினாலும், இவ்வுரை தவறாகும்.

"**செந்தமிழ் நாடாவது**: வைகையாற்றின் வடக்கும், ............மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையானும், வையையாற்றின் தெற்காகிய கொற்கையும் கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும் மருத யாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டுமாதலானும், அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு :—

"வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி."

என்றமையானும், இதனுள் தமிழ் கூறும் நல்லுலகமென விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்கெல்லை கூறியவதனாற் குமரியின் தெற்காகிய நாடுகளை யொழித்து, வேங்கட மலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலமென்றுரைப்ப" என்று தெய்வச்சிலையார் பிறனுடன்பட்டது தானுடன்படுதலாகக் கூறிய உரையே உண்மையானதாம்.

கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டையும்,

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்."

என்னும் வெண்பாவாற் குறித்து; "தென் பாண்டி நாட்டார் ஆ எருமை என்பனவற்றைப் பெற்றமென்றும்; குட நாட்டார் தாயைத் தள்ளையென்றும், நாயை ஞெள்ளை என்றும்; குட்ட நாட்டார் தந்தையை அச்சன் என்றும்; கற்கா நாட்டார் வஞ்சரைக் கையர் என்றும்; சீத நாட்டார் வடா வென்பதனை எலுவன் என்றும், தோழியை இகுளையென்றும், தம்மாமி யென்பதனைத் தந்துவையென்றும்; பூழி நாட்டார் நாயை ஞமலியென்றும், சிறு குளத்தைப் பாழியென்றும்; அருவா நாட்டார் செய்யைச் செறுவென்றும், சிறு குளத்தைக் கேணியென்றும்; அருவாவடதலையார் குறுணியைக் குட்டையென்றும் வழங்குப."

என்று நச்சினார்க்கினியர் முதலியோர் காட்டுக் கூறியது கி. பி. 12-ம் நூற்றாண்டிற் கேற்றதாதலின், கி. மு. 2000 ஆண்டுகெட்கு முற்பட்ட தொல்காப்பியர் காலத்திற் கேற்காது.

"இனிச் சிங்களம் அந்தோ வென்பது; கருநடங் கரைய சிக்க குளிர என்பன; வடுகு செப்பென்பது; துளு மாமரத்தைக் கொக்கென்பது; ஒழிந்தவற்றிற்கும் வந்துழிக் காண்க," என்று நச்சினார்க்கினியரும்;

"பன்னிரு நிலமாவன:—.......பொங்கர் நாடு.......அருவாவடதலை என்ப. இவை செந்தமிழ்(சேர்ந்த) நாடென்றமையால் பிற நாடாதல் வேண்டுமென்பார் உதாரணங் காட்டுமாறு :—.......பன்னிருநிலமாவன :—

"குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும், சையத்தின் மேற்குப் பட்ட கொங்கணமும் துளுவமும் குடகமும் குன்றகமும், கிழக்குப்பட்ட கருநடமும் வடுகும் தெலுங்கும் கலிங்கமும் என்று கொள்ளப்படும்.

"இவற்றுள், கூபகமும் கொல்லமும் கடல் கொள்ளப் படுதலின், குமரியாற்றின் வடகரையைக் கொல்லமெனக் குடியேறினர் போலும். பஞ்சத்திராவிடமெனவும் வட நாட்டார் உரைப்பவாகலான், அவையைந்தும் வேங்கடத்தின் தெற்காதலுங் கூடாமையுணர்க.

"அந்நிலத்து வழங்குஞ் சொல்லாகிச் செஞ்சொல்லின் வேறுபட்டுச் சான்றோர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா, எ-று.

"குடாவடி யுளியம் என்றவழி, குடாவடி என்பது குடகத்தார் பிள்ளைகட்கு இட்ட பெயர். அந்தோ என்பது சிங்களவர் ஐயோ என்பதற்கிட்ட பெயர். யான் தற்கரைய வருது என்றவழி, கரைதல் என்பது கருநாடர் விளிப்பொருளுணரக் கூறுவது. செப்பு என்பது வடுகர் சொல்லுதற்குப் பெயராக வழங்குவது. கொக்கு என்பது துளுவர் மாவுக்குப் பெயராக வழங்குவது. பிறவும் இவ்வாறு வருவன பலவற்றையும் வந்தவழிக் கண்டுகொள்க" எனக் கொண்டுகூற்றுகத் தெய்வச் சிலையாரும் கூறியதே ஏற்ற உரையாம.

தொல்காப்பியர் காலத்தில் கொடுந்தமிழ் நாடுகளாயிருந்த பழந்தீபமும் சிங்களமும் கருநடமும் வடுகும் (தெலுங்கமும்) கலிங்கமும் பிற்காலத்தில் பிறமொழி நாடுகளாய் வேறுபட்டு விட்டன. நாவலந் தேயத்திலுள்ள மொழி வேறுபட்ட நாடுகள் தமிழுட்பட மொத்தம்

பதினெட்டாகக் கணக்கிடப்பட்டன. அப்பதினெட்டும் பிற்காலத்தில் ஐம்பத்தாறாய்ப் பிரிந்து போனமை புராணங் கூறும். பத்தாம் நூற்றாண்டில் இருந்த அல்லது அதை யடுத்து இருந்த இலக்கணவுரையாசிரியர், அக்கால நிலைக் கேற்ப அற்றைத் தமிழ் நாட்டின் நடுவொழிந்த பெரும் பாகத்தைத் தொகை பற்றிய பழைய மரபை விடாமல் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளாகப் பிரித்தனர். அவற்றுள் சேர நாட்டுப் பகுதிகளான குட்டம் குடம் வேண் மலாடு என்பன உள்ளன, அக்காலத்து மலையாளமொழி தோன் றாமையின். நன்னூலார் தங்காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளையும் தொல்காப்பியர் காலப் பன்னிரு கொடுந்தமிழ் நாடுகளையும் மனத்துட் கொண்டு,

> "செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
> ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
> தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி"

என நூற்பாச் செய்தார். பதினெண் நிலங்களை,

> "சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுக்குடகம்
> கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம்
> கங்கம் மகதம் கடாரம் கவுடம் கடுங்குசலம்
> தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே"

என்னும் செய்யுள் கூறும். இதிற் கூறிய சாவகம் சீனம் கடாரம் என்பவை முற்காலக் கொடுந்தமிழ் நாடுகளைச் சேர்ந்தவையல்ல. தமிழொழிந்த பதினேழ் நிலங்களிற் பல முற்காலக் கொடுந்தமிழ் நாடுகளா யிருந்தமையின் கொடுந் தமிழ் நாடல்லாத பிறவற்றையுஞ் சேர்த்துக் கூறிவிட்டார் பவணந்தியார்.

செந்தமிழ் தொல்காப்பியர் காலத்தில் வேங்கடம் வரை வழங்கியதாலும், அதையடுத்து வடக்குள்ள கன்னட முந் தெலுங்கும் முற்காலத்தில் கொடுந்தமிழாயிருந்தமை யாலும், அவற்றுக்கப்பால் தற்போது ஆரிய வடிவாயுள்ள மகாராட்டிரம் (மராட்டி) கூர்ச்சரம் (குசராத்தி) என்பவற் றையும் தமிழ் தெலுங்கு கன்னடத்தோடு சேர்த்துப் பஞ்ச

திராவிடம் என வடநூலார் பண்டைக்காலத்தில் வழங்கிய மையாலும், வடநாட் டாரிய மொழிகளில் திரவிடக் கூறுன சொற்களும் நெறிமுறைகளும் கலந்துள்ளமையாலும், முதலை கூட்டம் முதலிய தமிழ்ச் சொற்கள் நேபாள நாட்டு மலைவாணர் மொழியிலும் வழங்குவதாகத் தெரிகின்றமை யாலும், இந்தியாவின் வடமேற்கில் பெலுச்சித்தானத்தி லுள்ள மலைவாணர் பிராகுயி என்னும் திரவிடமொழியைப் பேசுகின்றமையாலும், ஒரு காலத்தில் நாவலந்தேய முழு வதும் தமிழல்லாவிடினும் திரவிடமாவது வழங்கி யிருத்தல் வேண்டும் என்பது ஊகிக்கப்படும்.

இன்றும் தென்னுட்டில் ஓரளவு செவ்வையாய்ப் பேசப்படும் தமிழ் வடக்கு நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து முதலாவது கொடுந்தமிழாயும் பின்பு திரவிடமாயும் திரிவதையும், திரவிடமும் ஆரியக்கலப்பால் காலாரியமாய் மாறுவதையும், அதற்கப்பால் முறையே அரையாரிய மொ ழிகளும் முழு ஆரிய மொழிகளும் வழங்குவதையும், ஆரியர் பழங்குடிச் சொற்களை யெல்லாம் அகற்றிவிட்டு அவற் றிடத்தில் ஆரியச் சொற்களையே வழங்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந்து இக்கேட்டுத்தொழிலை வடக்கிருந்து தென்கோடிவரை செய்து வருவதையும் நோக்கின், முதற் காலத்தில் ஒரு மொழியே நாவலந்தேய முழுதும் தென் கோடியிலிருந்து வடகோடி நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து வழங்கிய தென்பதையும், ஆரியக்கலப்பில்லா விட் டால் இன்றும் வடநாட்டில் திரவிடமே வழங்கும் என் பதையும் உய்த்துணரலாம்.

ஒரு மொழியே சிறிது சிறிதாய்ப் பெயர்ந்து வழங்கிய மையாலேயே, வடநாடுகளை வேற்று மொழி நாடென் றது 'மொழிபெயர் தேயம்' என்றனர் முன்னோர்.

" மொழிபெயர் தேஎத்தாயினும் " (குறுந். 11)

தமிழினின்று முதலாவது பிரிந்துபோன கொடுந்தமிழ் மொழிகள் கூர்ச்சரமும் மகாராட்டிரமுமாகும். அதன்பின் தெலுங்கும் கன்னடமும் மலையாளமும் முறையே பிரிந்தன.

தமிழ் அல்லது தமிழம் என்னும் பெயர் போன்றே, திரவிடம் என்பதும், முதலாவது செந்தமிழ் கொடுந்தமிழ் ஆகிய இருவகைத் தமிழையும் ஒரே மொழியாகக்கொண்டு அவற்றை ஒருங்கே உணர்த்தி வந்தது. தெலுங்கு தனியாய்ப் பிரிந்துபோனபின்பு, திரவிட மொழிகளை 'ஆந்திர-திரவிட பாஷை' என்னும் இணைமொழிப் பெயரால் அழைத்தனர் வடநூலார். இப்பெயரில் திரவிடம் என்னும் வருமொழி தெலுங்கொழிந்த திரவிடத்தை யெல்லாம் ஒருமொழியாகக் கொண்டது. இப்பெயரை 7-ம் நூற்றாண்டில் **குமரில பட்டர்** வழங்கினார். பின்பு கன்னடமும் மலையாளமும் பிரிந்து போனபின், தமிழ் என்னும் பெயர் பொருள்சுருங்கிச் சோழ பாண்டிய நாட்டுத் தமிழ்ப் பகுதியைமட்டும் குறிக்கும் சிறப்புப் பெயராயும், திரவிடம் என்பது ஒரோவிடத்துத் தமிழையும் ஒரோவிடத்துத் திரவிட மொழிகள் எல்லாவற்றையுங் குறிக்கும் பெயராயும், வழங்கி வந்தன. சென்ற நூற்றாண்டில்தான் **கால்டுவெல் கண்காணியார்** திரவிடம் என்னும் சொல்லைத் திரவிடமொழிகளின் பொதுப் பெயராகவும் தொகுதிப் பெயராகவும் வரையறுத்தனர்.

சேரநாட்டுத்தமிழ் கி. பி. 10-ம் நூற்றாண்டு வரை செந்தமிழாயும், பின்பு 16-ம் நூற்றாண்டுவரை கொடுந்தமிழாயுமிருந்து, அதன்பின் ஆரியக்கலப்பால் மலையாளம் என்னும் திரவிடமொழியாய்த் திரிந்தது. இதைக் கடைக்கழக நூல்களாலும், சிலப்பதிகாரம், புறப்பொருள் வெண்பாமாலை, சேரமான்பெருமாள் செய்யுள், நம்பியாரூரர் தேவாரம், குலசேகராழ்வார் பெருமாள் திருமொழி என்னும் சேரநாட்டுச் செந்தமிழ் நூல்களாலும், அந்நாட்டுக் கல்வெட்டுக்களாலும், செப்புப் பட்டயங்களாலும், மலையாள நூல்களாலும் அறியலாம்.

"வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்—தமிழ் கூறு நல்லுலகத்து"

என்று **பனம்பாரனாரும்,**

"வடக்குந் தெற்குங் குடக்குங் குணக்கும்
வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்

றிங்கான் கெல்லை யகவயிற் கிடந்த
நூலதின் முறையே வாலிதின் விரிப்பின''

என்று காக்கை பாடினியாரும்,

"வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
நாட்டியல் வழக்கம்"

என்று சிறுகாக்கை பாடினியாரும்,

"வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே"

என்று சிகண்டியாரும்,

"தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாவெல்லை"

என்று குறுங்கோழியூர்க்கிழாரும்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு"

என்று இளங்கோவடிகளும், இவ்வடிகளின் உரையில், "வடதிசைக்கண் வடுகொழிந்த திரிபுடைமொழி பலவுளவாக லான் மலையெல்லை கூறி ஒழிந்த திசை மூன்றிற்கும் திரிபின்மையாற் கடலெல்லை கூறினுரெனினு மமையும்" என்று அடியார்க்கு நல்லாருங் கூறியிருத்தலால், தொல்காப்பியர் காலத்தில் கன்னடந் தோன்றவில்லை யென்பதும், தெலுங்கு கொடுந்தமிழ் நிலையில் நின்ற தென்பதும், வேங்கட வெல்லைக்குத் தெற்கிலுள்ள நிலப்பகுதி முழுதும் செந்தமிழே வழங்கின தென்பதும் அறியப் படும். தெலுங்கு பிரிந்தது கி. பி. சுமார் 2-ம் நூற்றாண்டு என்றும், கன்னடம் பிரிந்தது கி. பி. சுமார் 6-ம் நூற்றாண்டு என்றும் கூறலாம். கொடுந்தமிழான திசைச் சொற்கட்குச் செப்பு சிக்கு அச்சன் முதலிய தெலுங்குச் சொற்களையும் கன்னடச் சொற்களையும் மலையாளச் சொற்களையும் எடுத்துக் காட்டாக இலக்கணவுரையாசிரியரெல்லாம் தொன்றுதொட்டு மரபு முறையிற் கூறி

வருவதால், தமிழல் - திரவிட மொழிகளெல்லாம் பண்டைக் காலத்தில் கொடுந்தமிழ்களாயிருந்தே பின்பு ஒவ்வொரு காலத்தில் வெவ்வேறாய்ப் பிரிந்துபோயின என்று அறிந்துகொள்க. "தென்பாண்டி............நாட்டெண்" என்னும் பிற்கால வெண்பாவில் கன்னடமுந் தெலுங்குங் குறிக்கப்படவில்லையே என்று ஐயுறுவார், குட்டமும் குடமும் வேணுமாகிய மலையாள நாடுகளைக் கொடுந்தமிழ் நாடாக அதிற் குறித்ததினின்றுவது, பிறவும் இங்ஙனமே அதற்குமுன் ஒவ்வொரு காலத்திற் பிரிந்து போயிருக்க வேண்டுமென்று தெளிந்துகொள்க. இன்றும், 'பச்சமலயாளம்' 'ஹளகன்னடம்' 'அச்சதெலுங்கு' என்னும் பழந்திரவிட மொழிநிலைகளை நோக்கின், அவற்றுக்கும் தமிழுக்கு முள்ள நெருங்கிய தொடர்பு புலனும்.

இந்நிலையில் கூட, 'தம்பிராட்டி', 'கைநீட்டக்காசு' முதலிய மலையாளச் சொற்களும்; 'கொண்டாடு', 'திக்கில்லாத' முதலிய கன்னடச் சொற்களும்; 'ஓடச்சரக்கு', 'மூக்குப் பொடி' முதலிய தெலுங்குச் சொற்களும் எத்துணைத் தமிழ்மணங் கமழ்வன!

**(7) தமிழினின்று பிற திரவிட மொழிகள் வேறுபடக் காரணங்கள்.**

க. தமிழ அல்லது திரவிட மக்கட் பெருக்கம்.

ஒரு மொழியார் மிகப் பலராகப் பெருகிவிடின், அவர் நெடுந்தொலை சென்று பரவ நேரும். அப்போது தட்ப வெப்பநிலை வேறுபாட்டாலும் சுற்றுச் சார்பினாலும் பழஞ் சொல் மாற்றினாலும் தனி விருப்பத்தாலும் சொற்கள் திரியவும் புதிதாகத் தோன்றவும் பெறும். பொதுவாக, சுமார் 500 கல் தொலைவாயின் புதுச் சொற்கள் தோன்றுவதும் மொழி திரிவதும் இயல்பு.

உ. எழுத்தொலித் திரிபு.

இது தட்ப வெப்பநிலை வேறுபாட்டாலும் சோம்பலாலும் நிகழ்வது.

| மலையாளம் | கன்னடம் | தெலுங்கு | |
|---|---|---|---|
| ந—ஞ | ப—ஹ | ழ—ட | —தட்பவெப்பநிலை |
| ஐ—அ | ஐ—எ | ண—ன | —சோம்பல் |

இனி, ஊண், தொழில், பழக்கவழக்கம், அயன்மொழிக் கலப்பு முதலியவற்றாலும் எழுத்தொலி திரியும். எழுத்தொலித்திரிபு தட்பவெப்பநிலை ஊண்முதலியவற்றால் திரிவது கிளைமொழியாக்கத் (Dialectic Variation) திற்குக் காரணமாம்; சோம்பலால் திரிவது ஒலிமுறைக் கேடாம் (Phonetic Decay).

ரு. சொல் திரிபு.

சு. பொருள் திரிபு.

எ. டு: வெள்ளம் (த.) = வெள்ளையான புதுப் பெருக்குநீர்; வெள்ளம் (ம.) = நீர்.

௫: இயற்கைத் தெரிப்பு (Natural Selection).

தாய்மொழியாகிய தமிழில் வீட்டைக் குறிக்கும் ஒரு பொருட் பல சொற்களில், தெலுங்கு இல் என்னுஞ் சொல்லையும் கன்னடம் மன என்னுஞ் சொல்லையும் தெரிந்து கொண்டன.

சு. வழக்கற்ற சொல் வழங்கல்.

எ. டு: துன்னு = தை. (ம.), தெவு = தெரு(க.), நெய்த்தோர் = நெத்துரு (தெ.) வழக்கற்ற சொல் வழங்கலாவது தமிழில் இதுபோது பேச்சு வழக்கற்று எழுத்து வழக்கில் மட்டுமுள்ள சொற்கள் பிற திரவிட மொழிகளில் பேச்சு வழக்கில் வழங்குவது.

எ. குடியேற்றப் பாதுகாப்பு (Colonial Preservation)

எ. டு: போழ்(ம.), = போழ்து. கொம்மு (தெ.) = கொம்பு. குடியேற்றப் பாதுகாப்பாவது இதுபோது தமிழில் வழங்காவிடினும் குமரிநாட்டில் வழங்கியவாகத் தெரிகின்ற சொற்களும் சொல்வடிவங்களும் பிற திரவிட மொழிகளிற் பாதுகாக்கப்பட்டிருத்தல்.

அ. புத்தாக்கச் சொல்.

எ. டு: மேடி (ம.) = வாங்கு, வெள்ளு (தெ.) = செல்.

கூ. தாயொடு (தமிழொடு) தொடர்பின்மை

க0. வடசொற் கலப்பு.

கக. வடமொழி எழுத்தையும் இலக்கணத்தையும் மேற்கொள்ளல்.

கஉ. தமிழின் பண்படுத்தம் (Cultivation).

## (8) திரவிடத்திற்கு ஆரியக் கலப்பால் வந்த கேடு.

க. தாய்மொழிக்கும் சேய்மொழிக்கும் தொடர்பு அறவு.

உ. திரவிட மொழிப் பிரிவினையும் மக்கட்பிரிவினையும்.

ங. திரவிட வொலித் திரிபும் சொற்றிரிபும்.

ச. திரவிடச் சொல் வழக்கொழிவும் மறைவும்.

ரு. சரித்திர மறைப்பும் மலேவும்.

சு. புதுச்சொல்லாக்கத் தடை.

எ. திரவிடர்க்குத் தாய்மொழி யுணர்ச்சியின்மை.

அ. திரவிடக் கலே வளர்ச்சியின்மை.

கூ. திரவிட மொழி மறைவு.

க0. சொல்வழி ஐயப்பாடு. (அதாவது, சில சொற்கள் ஆரியமா திரவிடமா என்று ஐயுறப்படுதல்.)

ஆரியர் வடமொழியைத் தேவமொழியென்று சொல்லித் திரவிட மொழிகளிலெல்லாம் எண்ணிறந்த வேண்டாத வடசொற்களைப் புகுத்தி, தமிழொழிந்தவற்றிற்கு வடமொழி யெழுத்துக்களையும் இலக்கணத்தையும் வகுத்து, சரித்திரத்தை மாற்றி, திரவிட நாகரிகத்தை ஆரிய நாகரிகமாகக் காட்டி. வடமொழியையே திரவிடத் தாயென்று கருதும்படி செய்துவிட்டனர். தமிழரல்-திரவிடரும் வடமொழித் தொடர்பை உயர்வாகவம் தமிழ்த் தொடர்பை இழிவாகவும் கருதி, ஆரியச் சார்பில்லாத தமிழையும் தமிழரையும் பழிக்கின்றனர். இது, மூக்கறையன் பிறரையும் மூக்கறுக்கச் சொன்ன கதையேயன்றி வேறன்று.

**(9) திரவிட மொழிகளெல்லாம் சேர்ந்தே முழுத்திரவிடம் ஆகும் என்பது.**

மொழிகள் வழங்குவது வாயினால். பல சொற்கள் சேர்ந்தே மொழி. சொற்களை ஒவ்வொன்றாய் வழங்காது விட்டால் பின்பு மொழியும் வழக்கற்றொழியும். எழுத்து வடிவிலிருப்பது மட்டும் மொழி வழக்கன்று. கோதியம், (Gothic) இலத்தீன், சமற்கிருதம், முதலிய வழக்கற்ற மொழிகளெல்லாம் எழுத்து வடிவில் இன்னுமுள. ஆரியச் சொற்களைத் தேவையின்றிக் கலந்ததினால் அவற்றின் நிலையி லிருந்த திரவிடச் சொற்களெல்லாம் வழக்கிறந்தும் மறைந் தும் போய்விட்டன. இலக்கியமுள்ள மொழியானால் வழக் கற்ற சொற்கள் இலக்கியத்திற் போற்றப்பட்டிருக்கும்; அஃதில்லாததாயின் மீட்பற இறந்தொழியும். வருஷம், வார்த்தை, வியாதி, வீரன், வேதம், வைத்தியம் முதலிய வடசொற்கள் முறையே ஆண்டு, சொல், நோய், மறவன் அல்லது மழவன், மறை, மருத்துவம் அல்லது பண்டுவம் முதலிய தென்சொற்களை வழக்கு வீழ்த்தியுள்ளன. இலக் கியமில்லாத வடநாட்டுத் திரவிட மொழிகளோ, ஆரியச் சொற் கலப்பால் திரிந்தும் மறைந்தும் வருகின்றன. கோண்டி (Gondi), பத்ரீ (Bhatri), மால்ற்றோ (Malto), போய் (Bhoi) முதலிய திரவிட மொழிகள் மெள்ள மெள்ள ஆரிய மயமாவதை அல்லது மறைந்து போவதைப் பண்டிதர் கிரையர்சன் 1906-ம் ஆண்டே தமது 'இந்திய மொழியியல் அளவீடு' என்னும் நூலிற் கூறியுள்ளார். தமிழை ஆரியத்தினின்று விலக்காவிட்டால், சிறிது சிறி தாய்த் தெற்கே தள்ளிப்போய் இறுதியில் தென்மொழி தென்புலத்தார் மொழியாகிவிடும். இதுவே ஆரியர் விரும்புவது.

செந்தமிழும் கொடுந்தமிழும் சேர்ந்ததே தமிழாதலா னும், தமிழல்-திரவிட மொழிகளெல்லாம் பழைய கொடுந் தமிழ்களே யாதலானும், திரவிடரெல்லாம் ஒரு குலத்தாரே யாதலானும், ஆரியக் கலப்பின்றி அவர் பேசும் சொற்க ளும் இயற்றிய நூல்களும் திரவிடமே யாதலானும், எல்லாத்

திரவிட மொழிகளும் சேர்ந்தே முழுத்திரவிடமாகும். திரவிட மொழிகள் பலவாயினும், அவற்றுள், தமிழ் தெலுங்கு கன்னடம் மலையாளம் என்னும் நான்குமே சிறந்தனவாகும்.

திரவிடர்க்குச் சிறப்பாக வுரிய தூய-பழைய-பல துறைப்பட்ட-உயர்நிலை இலக்கியம் தமிழிலேயே யிருத்தலானும், தமிழல்-திரவிட மொழிகளில் உள்ள இலக்கியங்கள் பிற்பட்டனவும் பலதுறைப் படாதனவும் பெரும்பாலும் ஆரியச் சார்புள்ளனவும் கழக நூல்நிலைக்குத் தாழ்ந்தனவுமா யிருத்தலானும், தமிழரல்-திரவிடரெல்லாம் தத்தம் இலக்கியத்தைப் போன்றே பிற திரவிட இலக்கியங்களையும் பேணுவதுடன் தமிழிலக்கியத்தையே சிறப்பாகப் பேணிக் கற்றற்குரியர். தமிழில் வழங்காத சில தூய சிறந்த திரவிடச் சொற்கள் பிற திரவிட மொழிகளில் வழங்குதலின், தமிழரும் பிற திரவிட மொழிகளைப் பேணிக் கற்றற்குரியர். திரவிட மொழிகளிலுள்ள திரவிடச் சொன்னூற்கலையனைத்தும் திரவிடரெல்லார்க்கும் பொது வுடைமையென்றறிதல் வேண்டும். தமிழும் பிற திரவிடமும் முறையே இலக்கியத்திலும் சொல்லிலும் ஒன்றுக்கொன்று உதவும் நிலை தாயும் மக்களும் போல ஆதலின், தமிழரல்-திரவிடர் இனிமேலாயினும் ஆரியச் சார்பை இயன்றவரை அகற்றிவிட்டுத் தமிழைத் தழுவுவாராக.

ஆரியக் கலப்பினாலேயே மாபெருந் திரவிட நாடு சீர்குலைந்து சின்னபின்னமாய்ச் சிதைந்து கிடக்கின்றதென்க.

வைத்தூற்றி (Funnel) என்னும் மலையாளச் சொல்லும், கெம்பு என்னும் கன்னடச் சொல்லும், எச்சரிக்கை என்னும் கன்னட தெலுங்குச் சொல்லும் தமிழுக்கு இன்றியமையாதனவே.

செய்யுன்னோன் (செய்நன்) என்னும் மலையாளச் சொல்லையும், தெகு (தெவு) என்னும் கன்னடச் சொல்லையும், அட்ட (அட்டை) என்னும் கன்னட தெலுங்குச்

சொல்லையும்[1] அறியும்போதே, அச் சொற்கட்குத் தமிழிற் கூறும் பொருள் நன்றாய் விளங்குகின்றது ; வழுவுந் தெரிகின்றது.

"தெவுக் கொளற் பொருட்டே." (தொல். 345)

## (10) தமிழ்ப் பண்படுத்தம்.

சிலர், வட நாட்டில் பிராகிருதம் என்னும் பழைய மொழிகளைப் பண்படுத்திச் சமற்கிருதம் அமைத்தாற் போலத் தென்னாட்டிலும் திரவிடமொழிகளைப் பண்படுத்தி அமைத்ததே செந்தமிழ் என்றும் தமிழுக்குப் பிற திரவிட மொழிகள் கிளைமொழி யெனப்படும் சேய் மொழிகளாகாது இனமொழி யெனப்படும் உடன்பிறப்பு மொழிகளே யென்றும், திரவிடச் சொற்களின் வேர்களையெல்லாம் செந்தமிழல்லாத திரவிட மொழிகளில்தான் காணவேண்டும் என்றும் கூறுகின்றனர். இவர் திரவிட சரித்திரத்தையும் மொழிநூலையும் தமிழின் இயல்பையும் அறிந்திருந்தால் இங்ஙனங் கூறார்.

தமிழ் பண்படுத்தப்பட்டது உண்மையே. ஆனால் அப் பண்படுத்தம் ஆரியமுறையில் வேர்ச்சொல் மறையும்படி திரித்துச் செய்யப்பட்டதன்று. முதற்றமிழரின் ஒலிமுறையும், சொற்களின் பழைய அல்லது திருத்த வடிவும், நுண்பொருள் விளக்கமும், சொற்றொடரின் வழா நிலையும் காத்துக்கொள்ளும் வரம்பீடே செந்தமிழ்ப் பண்படுத்தமாம்.

ட ண முதலிய (மொழிமுதலாகா) வெழுத்துக்களைக் கொண்டு முதற்றமிழரின் சொற்கள் தொடங்கவில்லை. அதனால், தமிழுக்கு முதன்முதல் இலக்கணம் வகுத்த போது, அக்கால மொழிமுதலாகா வெழுத்துக்கள் மொழி முதலெழுத்துக்களாகக் கொள்ளப்பட்டில.

---

1. 'அட்டையாடல்' என்னுந் தொடரில், அட்டை யென்பது தலையில்லா முண்டத்தைக் குறிக்கும். அட்ட அல்லது அட்டெ என்னும் கன்னட தெலுங்குச் சொல்லுக்கு இதுவே பொருள்.

கொச்சை வழக்கில், சொற்களின் னகரவீறுகள் ‘ன்’, ‘ம்’ என்னும் ஈரெழுத்திற் கிடைப்பட்ட ஒலியாயும், ஐகார வீறுகள் அகர எகர ஈறுகளாகவும் ஒலிக்கும். எ. டு: நான்—நா(ன்); விலை—வில, நடத்தை—நடத்தெ. இவை தமிழில் வழுவாம்; ஆனால், இந்தியிலும் பிற திரவிட மொழிகளிலும் வழாநிலையாம். அவர்கள் என்னும் சொல்லை அவக என்று ஒலிப்பர். இது தமிழில் வழுவாம், ஆங்கிலத்தில் வழாநிலையாம். (pearl என்னும் சொல்லின் ரகரத்தை நோக்குக.) இங்ஙனம் தமிழுக்கு இயல்பும் வழாநிலையும் அடிப்படையாயின், பிறமொழிகட்குத் திரிபும் வழாநிலையும் அடிப்படையாம்.

அவன், போயினான் என்னும் சொற்கள் தெலுங்கில் வாடு, போயினாடு எனத் திரிகின்றன. தமிழில் கான் என்பது காடு எனத்திரிந்து சிறிது பொருள் வேறுபடுகின்றது. ஆனால், வாடு, போயினாடு என்பன அங்ஙனமல்ல. வருது (வருகிறது), பேயும் (பெய்யும்) முதலிய வடிவுகளும் செந்தமிழ்க்குரியவல்ல.

மூரி (மூ—மூர்—மூரி) என்பது கிழ எருது. இதை மலையாளத்தில் எருது என்னும் பொருள்படப் பொதுப்பித்தல் (Generalisation) நுண்பொருள் விளக்கத்திற்கு மாறானது. ஒருவன் ஒருவனிடத்தில் ஒரு பொருளைக் கேட்கும்போது, இழிந்தோன் ஈ என்றும் ஒத்தோன் தா என்றும் உயர்ந்தோன் கொடு என்றும் கூற விதித்தனர் முன்னோர். ஆனால், இதைத் தமிழரும் தற்போது கைக்கொள்வதில்லை. நான் அவனுக்குத் தந்தேன், அவன் எனக்குக் கொடுத்தான் என்பன வினைவழாநிலைபற்றிய சொற்றொடர்கள்.

இனி, புணர்ச்சித் திரிபையும் பண்படுத்தத்தின் பாற்படுத்தலாம். மூவகைப் புணர்ச்சித் திரிபுகளுள், திரிதல் ஒன்றே பண்படுத்தத்தின்பாற்பட்டது. அதிலும், தேங்குடம் வேப்பிலைபோன்ற திரிபுகள் அதன் பாற்படா. கண் + கடை = கட்கடை, மண் + தாழி = மட்டாழி, பல் + பொடி = பற்பொடி, கல் + பு = கற்பு, கல் + தாழை = கற்

ருழை, முள் + செடி = முட்செடி, நள் + பு நட்பு, தாள் + துணை = தாட்டுணை, பொன் + குடம் = பொற்குடம், பின் + பாடு = பிற்பாடு, பொன் + தட்டு = பொற்றட்டு என்பன போன்றவையே பண்படுத்தமாகும். அன்பு + தளை = அற்புத்தளை என்பது செய்யுட்கே யுரியது. எனைத் தோன்றல் கெடுதல் ஆகிய இரண்டும் இயல்பாகவே நேர்ந்தன. தலை + கட்டு = தலைக்கட்டு என்று தமிழில் புணர்ந்தது தலகெட்டு என்று தெலுங்கில் வலிக்காது வழங்குகின்றதேயெனின், ஆரியத்திலும் ஆரியத்தன்மை சான்ற தெலுங்கிலுமுள்ள வல்லினங்களெல்லாம் தமிழ் வல்லினங்களின் இரட்டியாதலின், தலகெட்டு என்னும் தெலுங்குப் புணர்மொழி ஓசையில் தலைக்கட்டு என்னும் தமிழ்ப் புணர்மொழியை யொத்ததே யென்று கூறிவிடுக்க.

தோன்றல் திரிபு தனித்தனி நின்ற சொற்களின் இணைப்பைக் காட்டுகிறது. சொல்லிணைப்பு பொருளிணைப்பைக் குறிக்கும். நிலைமொழியின் ஈற்று வலியிரட்டலும் இடைநின்ற மெலி வலித்தலும் இங்ஙனமே. வாழை, காய்; காடு, ஆறு; வேம்பு, இலை; என்னும் சொற்கள் தனித்தனி நின்றபோது தனித்தனிப் பொருளையே உணர்த்தும். அவை, வாழைக்காய் காட்டாறு வேப்பிலை எனப் புணர்ந்தபோதோ, வாழையின் காய், காட்டிலுள்ள ஆறு, வேம்பின் இலை என அவற்றின் பொருள்கள் தொடர்புபட்ட நிலையைக் காட்டும். முதன்முதல் இம்முறையைக் கையாண்டவர் பொதுமக்களே.

உயிரும் உயிரும் புணரும்போது யகரவகர உடம்படு மெய்கள் தோன்றுவது எம்மொழிக்கும் இயல்பாம். ஆனால், அதை வரிவடிவில் முதன்முதற் காட்டினவர் தமிழரே. தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில், 140-ம் நூற்பாவுரையில் "வரையாரென்றதனான் உடம்படு மெய்கோடல் ஒருதலை யன்று. கிளி அரிது, மூங்கா இல்லை எனவும் வரும்" என்றும், 259-ம் நூற்பாவுரையில் 'அதா அன்று' என்னும் எடுத்துக்காட்டும், 284-ம நூற்பாவுரையில் பனு அட்டு என்னும் எடுத்துக்காட்டும், 294-ம் நூற்பாவுரையில்

கோலூன் என்னும் எடுத்துக்காட்டும் கூறியிருப்பதால், தமிழிலும் முதற்காலத்தில் உடம்படு மெய்யின்றி யெழுதப் பட்டதென ஊகிக்கலாம்.

திரவிடம் தோன்றினது குமரிநாடாதலானும், குமரிநாட்டு மொழி தமிழேயாதலானும், திரவிடச் சொற்கட் கெல்லாம் பெரும்பாலும் வேர் தமிழிலேயேஇருத்த லானும், தமிழ்ச் சொற்களிற் பெரும்பாலன இன்றும் தொல்லை வடிவிலேயே வழங்குதலானும், செய்யுள் வழக்கில் திரிந்துள்ள ஒரு சில சொற்களும் உலக வழக்கில் இயல்பு வடிவில் இருத்தலானும், தமிழொலிகளெல்லாம் இயல்பும் தூய்மையுமாயிருத்தலானும், தமிழிலேயே திரவிட வேர்ப்பொருள் காண முடியும். இதைப் பிற்காட்டும் எடுத்துக்காட்டு விளக்கங்களால் படிப்போர் தாமே வெள்ளிடை மலையாக் காண்பர்.

(11) கால்டுவெல் தமிழைச் சிறப்பித்துக் கூறுவன.

"திரவிட மொழியும் கிளைமொழியுமான ஒவ்வொன்றின் இலக்கண அமைப்பையும் அதனதன் தகுதிக்கும் ஆசிரியர்க்கு அதிலுள்ள பயிற்சிக்கும் தக்கவாறு மிகவோ குறையவோ ஆராய்ந்து விளக்கும்போதே, தாம் முப்பத்தேழாண்டுகட்கு மேலாகப் பயின்று வந்ததும் தம் மதத் தொண்டிற்குப் பயன்படுத்தியதும் திரவிட மொழிகளுட் பெரும்பாலும் முதன்முதற் பண்படுத்தப் பெற்றதும் தலைசிறந்த முறையில் வளர்க்கப் பெற்றதும் பலவகையிலும் திரவிடக் குடும்பத்திற்குப் பதின்மை தாங்குவதுமான, தமிழமைப்பை அடிக்கடி எடுத்துக் காட்டுவது ஆசிரியரின் சிறப்பு நோக்கமாகும்."

(திரவிட ஒப்பியல் இலக்கணம் - முன்னுரை, பக். 1)

"இக்குடும்பம் (திரவிடம்) ஒரு காலத்தில் ஐரோப்பிய ஆசிரியரால் தமிழியம் ('Tamulian' or 'Tamulic') என அழைக்கப்பட்டது. ஆனால், தமிழ் பெரும்பாலும் இக் குடும்பத்தில் மிகத் தொன்மையானதும் மிக வுயர்வாகப் பண்படுத்தப் பெற்றதும் இக் குடும்பத்திற்குரிய வடிவங்

களிலும் வேர்களினும் பெரும்பாலானவற்றைப் பெற்றிருப்பதுமான மொழியாயிருந்தாலும்..........''

(கூடி. கூடி. பக். 4)

"தமிழ்—இம்மொழி திரவிட மொழிகளுள் பெரும்பாலும் முதன்முதல் பண்படுத்தப் பெற்றதும் மிகுந்த வளமுள்ளதும் ஐயமறப் பழைமையான வடிவங்களுள் பெரும் பகுதியையும் மிகப்பல வகைகளையும் கொண்டுள்ளதுமானதாதலின், தன் தகுதிக்கேற்றபடி, பட்டியில் முதலிற் குறிக்கப்பெற்றுள்ளது.'' (கூடி. கூடி. பக். 9)

"எவ்வகையிலும் திரவிட மொழிகளுக்குள் தலைசிறப்பப் பண்படுத்தப் பெற்ற தமிழ், வேண்டுமாயின், வடமொழித் தொடர்பை அறவே விலக்குவதுடன், தனித்து வழங்குதல் மட்டுமன்று அதன் உதவியின்றித் தழைத்தோங்கவும் இயலும்.''

"ஏறத்தாழ எல்லா நூல்களும் எழுதப்பட்டுள்ள செந்தமிழ் என்னும் பழைய அல்லது இலக்கியத் தமிழ் மிகமிகக் குறைந்த வடசொற்களையுடையது; வடசொற்களையும் வடமொழி யெழுத்துக்களையும் புறக்கணித்துத் தூய பழந்திரவிட வொலிகளையும் வடிவங்களையும் வேர்களையுமே கொண்டிருப்பதற்குக் காரணமான ஊக்கத்தோடும் பொருமையோடுங் கூடிய அக்கறை காட்டுவதில் உலகவழக்கு அல்லது உரைநடையினின்று வேறுபடுவது. ஒரு தமிழ்ச் செய்யுள், பிற திரவிட மொழிகளிற்போலாது, தான் கொண்டுள்ள வடசொற்களின் மிகுதிக்குத் தக்கவாறன்றி அவற்றின் குறைவுக்குத் தக்கவாறே சுவையும் இலக்கியத் தன்மையும் நிரம்பியதென்று கருதப்படும் அவ்வளவு, இவ் வடசொற் பொருமை படித்த தமிழர் மனதில் முற்றிலும் பதிந்துள்ளது. மிக வொதுங்கியுள்ள நாட்டுப்புறங்களில் வாழும் நனி தாழ்ந்தோர் மொழி வடசொற்களை விலக்குந் திறத்தில் பேரளவு இலக்கிய மொழியை ஒத்திருக்கின்றது''

(கூடி. கூடி. பக். 49)

"தமிழ் தன்னிடத்துக் கொண்டுள்ள வடசொற்களிற் பெரும்பாலனவற்றை அல்லது அவையெல்லாவற்றையும் உடனே நீக்கமுடியும். அங்ஙனம் நீக்குவதனால் அது நடை உயர்ந்து மிகத் தூய்மையும் நேர்த்தியுமடைகிறது."

(டி. டி. பக். 50)

"தமிழின் இலக்கியப் பண்படுத்தத்தின் மிகு தொன்மை"

i. "பிற திரவிட மொழிகளின் இலக்கிய நடை அவற்றின் உலக நடையினின்று வேறுபட்டிருப்பதைவிடத் தமிழின் இலக்கிய நடை அதன் உலக நடையினின்று வேறுபட்டுள்ளது."

ii. "தமிழின் அளவிறந்த சொல்வளமும் செந்தமிழிலக்கண வடிவுகளின் தொகைவகைகளும் மற்றொரு சான்றாகும். செந்தமிழிலக்கணம் வழக்கிறந்த வடிவங்களும் விலக்கப்பட்ட விகுதிகளும் வியப்பான வழூவமைதிகளும் செறிந்துள்ள பொருட்களம்.....................தமிழின் அளவிறந்த சொல்வளத்தை யாழ்ப்பாணத்து விடையூழியர் (Missionaries) வெளியிட்டுள்ள ஒரு பள்ளித் தமிழகராதி 58,500 சொற்களைக் கொண்டுள்ளமையே காட்டிவிடும். இன்னும் அவற்றோடு, அவ்வகராதியை நிறைவாக்க, பல்லாயிரங் குறியீடுகளையும் திசைச் சொற்களையும் ஆயிரக்கணக்கான புணர்ச்சொற்களையும் சேர்க்கவேண்டியதிருக்கும்"

பிற திரவிட மொழிகளின் அகராதிகளை ஆயும்போது, அவை தமிழகராதிகளிலுள்ள ஒரு பொருட் பலசொற் பட்டிகளைக் காட்டாமை ஒரு படிப்பாளியின் மனதில் மிகத் தெளிவாய்ப்படும். தமிழில்மட்டும் வழங்குகிற அளவில் தமிழுக்குரியவையென்று கருதப்படும் சொற்களை மட்டுமல்ல, தெலுங்கு கன்னடம் முதலிய மொழிகட்குரிய சொற்களையும் தமிழ் கொண்டுள்ளது. இங்ஙனம், இயல்பான தமிழில் உறைவிடத்திற்குரிய சொல் வீடு என்பது. ஆனால், தெலுங்கிற்குரிய இல். (தெ. இல்லு) என்னுஞ் சொல்லும், கன்னடத்திற்குரிய மனை (க. மன) என்னுஞ்

சொல்லுங்கூடத் தமிழிலிருப்பதுடன் சமையாசமையங்களில் வழங்கவுஞ் செய்கின்றன. குடி என்னும் இன்னொரு சொல் தமிழுக்கும் வடமொழிக்கும் பின்னிய (Finnish) மொழிகள் எல்லாவற்றிற்கும் பொதுவாக வழங்குகின்றது. தமிழ் இலக்கணமும் சொற்றொகுதியும் இங்ஙனம் பேரளவில் திரவிட வடிவங்களுக்கும் வேர்களுக்கும் பொதுக் களஞ்சியமாகும்.

iii. "தற்காலக் கன்னடமும் தற்காலத் தெலுங்கும் தமிழினின்று வேறுபடுஞ் செய்திகளில், பழங் கன்னடமும், பழ மலையாளமும், துளுவும், குடவும் கோண்டும், கூவும் தமிழுடன் ஒத்திருத்தல் தமிழின் தொன்மைக்கும் தூய்மைக்கும் மற்றொரு சான்றாகும்.

iv. "பல தெலுங்கு வேர்களும் விகுதிகளும் தமிழ் வடிவங்களின் திரிபாயுள்ளமை, பின்னவற்றின் மிகு தொன்மையை வலிமையாய் உறுதிப்படுத்தும்.

v. "தமிழின் தொன்மைக்கு மற்றொரு சான்று அதிலுள்ள வடசொல் தற்பவங்களின் பெருஞ்சிதைவாகும்.

vi. "தமிழின் இலக்கியப் பண்படுத்தத்தின் மிகு தொன்மை கல் வெட்டுக்களாலும் ஊகித்தறியப்படும்."

(ஷி. ஷி. பக். 83-88)

(கிறித்தவ மறையில்) 'அரசர்கள்' (இராஜாக்கள்) 'நாளாகமம்' என்னும் புத்தகங்களின் எபிரேய மூலத்தில், கி. மு. சுமார் 1,000 ஆண்டுகட்குமுன் தர்சீசு அல்லது ஒப்பீர் என்னும் துறைமுகத்தினின்று சாலோமோன் கப்பல்களிற் கொண்டு போகப்பட்ட சரக்குகளைக் குறித்த பட்டியில், மயிலுக்குக் கூறப்பட்டுள்ள சொல் உலகத்தில் எழுத்திற் காணப்படும் திரவிடச் சொற்களில் முற்பட்டதாகும். இது அரசர்களில் 'துகி என்றும், நாளாகமத்தில் தூகி என்றும் உள்ளது'........மயிலுக்குப் பழஞ் செய்யுளிலுள்ள தூய தமிழ் மலையாளப் பெயர் (அழகிய) தோகையை யுடையது என்று பொருள்படும் தோகை என்பது. (ஷி. ஷி. பக். 91)

"தமிழ் இலக்கியம் தெலுங்கு கன்னட விலக்கியத்திற்கு முற்பட்டது; மலையாள விலக்கியத்திற்கு மிக முற்பட்டது." (டி. டி. பக். 126)

**கால்டுவெல் கண்ட மொழிநூன் முடிபுகள்.**

"மொழிகள் மொழிக் குடும்பங்கள் ஆகியவற்றின் உறவைப் பதிற்பெயர்கள் (pronouns) மிக விளக்குகின்றன. ஏனென்றால், பதிற்பெயர்கள், சிறப்பாகத் தன்மை முன்னிலை யொருமைப் பெயர்கள், பிற சொல்வகைகளைவிட மிகுதியாக நிலைப்புத் தன்மையைக் காட்டுகின்றன; பல்லூழிக் கடப்பிலும் மிகச் சிறிதே திரிவனவாகப் பொதுவாகக் காணப்படுகின்றன; எண்ணுப் பெயர்களினும், வேற்றுமை யுருபுகளினும், வினை விகுதிகளினுங்கூட மிக நிலைத்தவையாயிருக்கின்றன; அவை பிறவற்றைப் போன்றே திரிவதற்கிடமிருப்பினும், அவற்றின் தொடர்புகளும் கிளைப்புகளும், காலத்தாலும் இடத்தாலும் எத்துணை அகன்று கிடப்பினும் ஏறத்தாழ மக்கள் மொழிகள் எல்லாவற்றிலும் கண்டுபிடிக்கப்படும். சிலவிடத்து, மூவிடப் பெயர்கள் மட்டுமே, முதலாவது ஒரே குடும்பத்தைச் சேர்ந்தனவாயிருந்து பின்பு காலக் கடப்பினாலும் திரிபின் வளர்ச்சியினாலும் பொது முறையாக வேறுபட்டுள்ள மொழிகளின் தொடர்புக் குறிப்பாய் அல்லது உறவுச் சான்றாயுள்ளன. இக் குறிப்பு, சிறப்பாக சொல்வகைகள் யாவற்றிலும் மிக நிலைப்பாய்த் தோன்றுகின்ற தன்மைப் பெயர்களைத் தழுவும்." (டி. பக். 254)

"பின்வரும் சொல் வரிசைகள் நாம் இலக்கண ஒப்பீட்டினால் கண்ட முடிபுக்கே தத்தம் அளவில் தனிப்பட்ட முறையில் சான்று பகர்கின்றன. அதாவது:—திரவிட மொழிகள், இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் முது தாயாகக் கருதப்படுகின்ற—வடமொழிக்கு முற்பட்ட—ஆரிய மொழியொடு தமக்குள்ள தொன்மையான வேரூன்றிய தொடர்பைக் காட்டும்போதே, அவற்றுக்குச் சித்திய (Scythian) மொழிக் குடும்பத்துடன், சிறப்பாக

உக்கிரிய (Ugrian) மொழிகளுடன், உள்ள உறவடையாளங்கள் மொத்தத்தில் மிக நெருங்கியும் மிகத் தெளிவாயும் மிக முக்கியமாயும் காண்கின்றன என்பதே."

(டி. பக். 452)

கால்டுவெல் கண்காணியார் மேற்கூறியவாறு திரவிட மொழிகளை, சிறப்பாகத் தமிழை, ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டாரெனினும், தொல்காப்பியத்தையும், கழக (சங்க) நூல்களையுங் கல்லாமையாலும், குமரி நாட்டு வரலாற்றை அறியாமையாலும், தமிழின் திரவிடத் தாய்மையைக் காணாததுடன், திரவிட நாகரிகத்தை ஆரிய நாகரிகமாகப் பிறழக் கொண்டு சில தனித் தமிழ்ச் சொற்களையும் வடசொற்களாகக் கூறிவிட்டனர். ஆயினும், கழக நூற்பயிற்சியும் தனித் தமிழுணர்ச்சியும் இல்லாத அக்காலத்தில் அயல் நாட்டாரான அவர் ஆரியத்தினின்று திரவிடத்தைப் பிரித்துக் காட்டின அத்துணையே மிகச் சிறந்ததென்று கொண்டு பெருமகிழ்ச்சியுடன் அவருக்கு என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேம்.

## (12) தமிழல் - திரவிடச் சொற் பாகுபாடு.

தமிழல்லாத பிற திரவிடச் சொற்களெல்லாம் (க) செந்தமிழ்ச் சொற்கள், (உ) கொடுந்தமிழ்ச் சொற்கள், (ங) வடசொற்கள் என மூவகைப்படும்.

# திரவிடத்தாய்

## I. மலையாளம்

### மலையாளப் பெயர்

**கேரளம், மலையாளம்** என்பன தற்போது மலையாள நாட்டையும், அங்கு வழங்கும் மொழியையும் குறிக்கும் பெயர்களாம்.

கழக (சங்க)க் காலத்தில் முத்தமிழ் நாடுகளில் ஒன்றா யிருந்த சேர நாட்டின் மேல்பாகமே இப்போது மலையாள நாடா யிருக்கின்றது. கீழ்பாகம் கொங்கு நாடும் (கோயம் புத்தூர் சேலம் கோட்டகப் பகுதிகள்) கங்கநாடும் (சேலம் மைசூர்ச் சீமைப்பகுதிகள்) ஆகும். மறன், திறன் முதலிய பெயர்கள் முறையே மறல், திறல் என்று திரிந் தாற்போல, சேரன் என்னும் பெயரும் சேரல் எனப் போலியாகிப் பின்பு 'அன்' ஈறு பெற்றுச் சேரலன் என வழங்கிற்று.

எ-டு : சேரன் செங்குட்டுவன்; களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், தகடூர் எறிந்த பெருஞ் சேரல், குடக்கோ இளஞ்சேரல்;

"தென்னவன் சேரலன் சோழன்" —(திருவாசகம்)

"செறுமா வுகைக்கும் சேரலன் காண்க" —(திருமுகப் பாசுரம்)

சேரலன் என்னும் பெயர் முறையே கேரலன், கேரளன் என மருவிற்று. இம் மரூஉ வடிவங்கள் பழந் தமிழ் நூல்களில் ஓரிடத்துங் காணப்படவில்லை; பிந்திய நூல்களில்தான் காணப்படுகின்றன. இதனால் இவை பிற் காலத்தன என்பது தெளிவு.

ச-க, போலி. ஒ. நோ : சீர்த்தி-கீர்த்தி, செம்பு-கெம்பு (க.)
ல-ள, போலி. ஒ. நோ : செதில்-செதிள், வேலை-வேளை.

பாண்டியன் என்னும் பெயர் பாண்டியம் என ஈறு திரிந்து பாண்டியன் செய்திகளைக் குறித்தாற்போல, கேரலன் கேரளன் என்னும் பெயர்களும், கேரலம்,

கேரளம் என ஈறு திரிந்து சேர நாட்டையும், அந்நாட்டு மொழியையுங் குறிக்கும்.

மலையாள நாட்டெல்லை

மேற்குத் தொடர்ச்சி (குட)மலைக்கு மேற்கே, வடக்கில் மங்களூரி (மங்கலாபுரம்) லிருந்து தெற்கில் திருவனந்தபுரம் வரைக்கும், தென்கன்னடம் மலபார் கொச்சி திருவதங்கோடு (திருவாங்கூர்) என்னும் நான்கு சீமைகளில் தாய்மொழியாகப் பேசப்படுவது மலையாளம்.

தென்னை மரத்தின் வடமொழிப் பெயராகிய நாளிகேரம் என்பது, கேரம் என முதற்குறையாய்ப் பின்பு கேரளம் என விரிந்து அம்மரம் மிகுதியாய் வளரும் மலையாள நாட்டைக் குறித்ததென்பது பொருந்தக் கூறும் பொய்ம்மைக் கூற்றாகும். வடமொழிக்கும் வடமொழியாளர்க்கும் உயர்வும் அதனால் தமிழுக்கும் தமிழர்க்கும் இழிவும் கற்பிக்கப்பட்ட புராணக் காலத்தில், வடமொழித் தொடர்பை உயர்வென மயங்கிய மலையாள நாட்டார், கேரளம் என்னும் பெயர்க்கு வடமொழி மூலத்தையும், கேரள நாட்டிற்குப் பரசுராம க்ஷேத்திரம் என்னும் புதுப் பெயரையும் மகிழ்ச்சியாய் ஏற்றுக்கொண்டனர். பரசுராமர்க்கு முந்தியே வழங்கிய பெயர் சேரநாடு என்பதும், அவர் இறுதிக் காலத்தில் தவஞ்செய்த இடமாகக் கூறியிருப்பது சேர நாட்டிற்கு வடக்கிலுள்ள கடற்கரைப் பகுதி யென்றும் அறிதல் வேண்டும்.*

பதினெட்டாம் நூற்றாண்டில் ஒரு நம்பூதிரிப் பார்ப்பனரால் இயற்றப்பட்டதாகத் தெரிகின்ற **கேரளோத்பத்தி**

---

* பண்டைச் சேரநாடு கூர்ச்சரம் (குஜராத்) வரையில் தொடர்ந்திருந்ததாலும், வடநாட்டு ஆரியர் தென்னாட்டிலும் வந்து குடிபுகுந்தாலும், பரசுராமர் தவஞ்செய்த இடத்திற்கு ஏற்பட்ட 'பரசுராம க்ஷேத்திரம்' என்னும் பெயர் அவ்விடத்தோடு தொடர்ந்த தென் பாகத்தையும் பிற்காலத்தில் தழுவலாயிற்று, இந்து (சிந்து) என்னும் வடநாட்டுப் பகுதியின் பெயர் தென்னாட்டையும் தழுவினாற் போல.

என்னும் புராணத்தில், பிராமணர் பஞ்சாபினின்று பரசுராமரால் தென் கன்னடத்திலுள்ள கோகர்ணத்தில் முதல் முதல் குடியேற்றப்பட்டனர் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. இதை S. சீனிவாச ஐயங்கார் தமது 'தமிழாராய்ச்சி' (Tamil Studies) என்னும் நூலில் (பக். 348) மறுத்து, பிராமணரைக் கோகர்ணத்தில் குடியேற்றியவன் கடம்ப மரபினரின் முதல்வனான மயூரவர்மன் என்றும், அவன் காலம் கி. பி. 6-ம் நூற்றாண்டின் முற்பகுதி யென்றுங் கூறியுள்ளார். ஆண்டுக் காண்க.

மலையாளம் என்னும் பெயர் அண்மையில் தோன்றியதாகும். சேரநாடு மலைநாடாதலால் சேரநாட்டான் மலையாளி யெனப்பட்டான். மலை + ஆளி = மலையாளி. ஆளி = ஆள். முதலாளி, தொழிலாளி, வங்காளி, பங்காளி முதலிய பெயர்களை நோக்குக. மலையாளியின் நாடும் மொழியும் மலையாளம் எனப்பட்டன.

ஒ. நோ: வங்காளி—வங்காளம்.

## மலையாளத் திரிபு

சேரநாடு கி. பி. 10-ம் நூற்றாண்டு வரை செந்தமிழரசரும் செந்தமிழ்ப் புலவரும் திகழ்ந்த செந்தமிழ் நாடாயிருந்தது.* ஐங்குறுநூறும் பதிற்றுப்பத்தும் ஆகிய கழக நூல்களும், சிலப்பதிகாரம் ஆகிய கழக மருவிய நூலும், புறப்பொருள் வெண்பா மாலையும், சேரமான் பெருமாள் நாயனாரின் ஆதியுலாவும், குலசேகர ஆழ்வாரின் பெருமாள் திருமொழியும் மலையாள நாடெனப்படும் சேர நாட்டில் எழுந்த செழுந்தமிழ் நூல்களே.

பதினாலாம் நூற்றாண்டில் (கி. பி. 1320) வீரராகவ சக்கரவர்த்தியால் பொறிப்பிக்கப்பட்ட கோட்டயம் செப்

* நன்னூற் சிறப்புப்பாயிரத்தில், "குணகடல் குடகம் குமரி வேங்கடம், எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்" என்று கூறியிருத்தலால் 12-ம் நூற்றாண்டில் சேரநாடு கொடுந்தமிழ் நாடாயிருந்தமை பெறப்படும்.

பேட்டு மொழி 'வாதில்' (வாயில்), 'ஒண்டாயில்' (உண்டாகில்), 'எழுந்நள்ளி' (எழுந்தருளி) முதலிய சில மலையாளத் திரிபுகளுடன் கூடிய தமிழே. அதே நூற்றாண்டில் (கி. பி. 1350) இயற்றப்பட்ட கண்ணசப் பணிக்கர் இராமாயண மொழியும் இத்தகையதே.

எ - டு: "கொண்டலிந் நேரிருண்டு சுருண்டு நீண்டொளி வார்ந்து திங்ஙும், குந்தள பாரமோடு முகில் குலத்திட மிந்நல்போலே, புண்டரீகேக்ஷணந் நரிகெப் பொலிந்தவள வீத சொந்நாள்."

இதில், குந்தளபாரம் புண்டரீகேக்ஷணன் என்னும் இரண்டே வடசொற்கள். இவற்றுள்ளும் குந்தளம் என்பது கூந்தல் என்னும் தென்சொல் திரிபு. வார்ந்து—வார்ந்நு; திணுங்கும்—திங்ஙும். இடை — இட. அருகே— அரிகெ.

போர்த்துக்கீசிய விடைத்தொண்டர் (Missionaries) முதன்முதல் மலையாளக் கரையில் வந்திறங்கினர் என்றும், மலையாள நாட்டு மொழியைத் தமக்கு முந்திய அரபியர் போல மலபார் என்றழைத்தனர் என்றும், கீழ் கரையினும் இலங்கைக் கரையினும் வழங்கிய மொழி (தமிழ்) அதை யொத்திருக்கக் கண்டு அதையும் அப் பெயரால் அழைத்தனர் என்றும், அவர்கள் மலையாளக் கரையிலுள்ள அம்பலக் காட்டில் 1577 அல்லது 9-இல் முதன் முதல் தமிழெழுத்தில் அச்சிட்ட புத்தக மொழியை 'மலவார் அல்லது தமிழ்' ('Malavar or Tamil') என்று குறித்தனர் என்றும் கால்டுவெல் கண்காணியார் கூறுகின்றார்.

(முன்னுரை, பக். 10—12)

இதனால், 16-ம் நூற்றாண்டுவரை மலையாள நாட்டு மொழி கொடுந் தமிழா யிருந்த தென்றும், அதன் பின்னரே வடமொழிக் கலப்பால் மலையாளமாகத் திரியத் தொடங்கிற் றென்றும் அறியலாம். மலையாளம் மிகத் தெளிவாய்ப் பிரிந்து போனது 17-ம் நூற்றாண்டில் (கி. பி. 1650) ஆரிய வெழுத்தை வகுத்தும், பெருவாரியாய் ஆரியச் சொற்களையும் விகுதிகளையும் புகுத்தியும், சேரநாட்டு மொழியைச் சிதைத்த துஞ்சத்து எழுத்தச்சனுலேயே.

1860-ம் ஆண்டில்தான் முதல் மலையாள இலக்கண மும் எழுந்தது. 19-ம் நூற்றாண்டுவரை மலையாளியர் தமிழையும் கற்றுவந்தன ரென்றும் அதன் பின்புதான் அவ்வழக்கம் அடியோடு விடப்பட்ட தென்றும் முதியோர் கூறுகின்றனர்.

மலையாள நாட்டில் பார்ப்பனரொழிந்த மற்றக் குலத்தாரெல்லாம் தமிழர் அல்லது திரவிடரே. குயவர், பணிக்கர், பாணர், ஆயர், ஈழவர், கவுடர் (கவுண்டர்) முதலிய பல குலத்தினர் தமிழ் நாட்டிலும் உள்ளனர். நாயர், நாயாடி, வாரியர், செறுமன் முதலிய குலத்தினர் மலையாளத்திற்குச் சிறப்பாயிருந்தாலும், அவர் குடிப் பெயரெல்லாம் தனித் தமிழே. தாழ்ந்தது உயர்ந்தது என்று முறையே பொருள் தரும் கிழக்கு மேற்கு என்னும் திசைப் பெயர்கள் குடமலைக் கீழ்நாட்டிற்கே ஏற்றவை. இவை மலையாளத்திலும் வழங்குவது மலையாளநாடு தமிழ்நாட்டுப் பகுதியே யென்பதையும் மலையாளியர் தமிழ மரபினரே என்பதையும் உணர்த்தும். பிற்காலத்தில் மேற்குத் திசைக்குப் படுஞாயிறு என ஒரு பெயரை அவர்கள் புனைந்து கொண்டாலும், அதுவும் தனித்தமிழே என்பதை அறிதல் வேண்டும்.

மலையாள நாட்டு அல்லது சேரநாட்டுத் துறைமுகங்கள் பழந் தமிழ் நூல்களில் பெருங் கடல்வாணிக நிலையங்களாகக் கூறப்பட்டுள்ளன.

> "செங்கோற், குட்டுவன் தொண்டி" —(ஐங். 178)
>
> ".................சேரலர்
> சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி யார்ப்பெழ" (அகம். 148)
>
> "கலந்தந்த பொற்பரிசம்
> கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
> மலைத்தாரமும் கடற்றாரமும்,
> தலைப்பெய்து வருநர்க்கீயும்
> புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்

முழங்குகடல் முழவின் முசிறியன்ன" (புறம்-343)
"இயற்றேர்க் குட்டுவன் வருபுனல் வாயில் வஞ்சி" (பத். 3)

மலையாள நாட்டிலுள்ள பல சிவநகரங்களும் விண்ணகரங்களும் நாயன்மாராலும் ஆழ்வாராலும் பாடப்பட்டுள்ளன. கோகர்ணம் திருச்செங்குன்றூர் (கொல்லத்திற்கருகிலுள்ளது) என்பன அப்பராலும் சம்பந்தராலும் 7-ம் நூற்றுண்டிலும், திருவஞ்சைக் களம் சுந்தரரால் 9-ம் நூற்றுண்டிலும், நேரிற் பாடப்பட்டுள்ளன. திருமுழிக்களம், திருநாவாய் திருவல்லவாழ் என்பன திருமங்கை யாழ்வார் 8-ம் நூற்றுண்டில் நேரிற் சென்று கண்டவை. இவற்றுடன் திருவனந்தபுரம் திருவண்பரிசாரம், திருக்காட்கரை, திருப்புலியூர், திருச்செங்குன்றூர், திருவண்வண்டூர், திருவத்தரு, திருக்கடித்தானம், திருவாறன்விளை என்பன நம்மாழ்வாரால் (கி. பி. 920) குறிக்கப்படுகின்றன. வித்துவக்கோடு குலசேகராழ்வாரால் 8-ம் நூற்றுண்டிற் பாடப்பட்டது (தமிழாராய்ச்சி, பக். 347). மேற்கூறிய திருநகரங்கள் 10-ம் நூற்றுண்டுவரை செந்தமிழ் நிலையங்களா யிருந்திராவிட்டால் பாடல் பெற்ற நகரங்களா யிரா என்பது திண்ணம்.

மலையாளத்திலுள்ள பழைமையான ஊர்ப்பெயர்களெல்லாம் இன்றும் தனித்தமிழாயே யிருக்கின்றன. கோடு (கோழிக்கோடு - Calicut), சேரி (தலைச்சேரி), குளம் (எர்ணாக் குளம்), புரம் (அங்காடிபுரம்), நாடு (வலையநாடு), ஊர் (கண்ணனூர்), குன்றம் (பூங்குன்னம்), கா (கன்னங்காவு), காடு (பாலைக்காடு - Palghat) குடி (சாக்குடி) வாசல் (பள்ளிவாசல்), அங்காடி (பரப்பனங்காடி), தோட்டம், பாடி, துறை (திருப்புணித்துறை), குறிச்சி, ஏரி, கரை (கொட்டாரக் கரை), களம் (திருவஞ்சைக் களம்), இருப்பு முதலியன தனித்தமிழ் ஊர்ப்பெயரீறுகளாம். கோடு = மலை. கா = சோலை.

பழஞ் சேரநாட்டின் கீழ்ப் பகுதியின் தென்பாகம் (கொங்கு நாடு) இன்றும் தமிழ் நாடா யிருக்கின்றது; வடபாகத்திற் கன்னடம் புகுந்துள்ளது.

12-ம் நூற்றாண்டில் கொடுந்தமிழ் நாடுகளாகக் குறிக்கப்பட்ட வேணாடு, பூழி நாடு, குட்ட நாடு, குட நாடு, மலை நாடு என்பன இற்றை மலையாள நாட்டுப் பகுதிகளாயுள்ளன.

"பூழியன் உதியன் கொங்கன் பொறையன்—வானவன் குட்டுவன் வான வரம்பன்—வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்—கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்—போந்தின் கண்ணிக்கோன் பொருநைத் துறைவன்—சேரன் மலையமான் கோச் சேரன் பெயரே" என்பது திவாகரம்.

இவற்றுள், கொங்கன், கொல்லிச் சிலம்பன், பொருநை (ஆன்பொருநை)த் துறைவன் என்னும் பெயர்கள், கோயம்புத்தூர் சேலம் ஆகிய இரு கோட்டகங்களும் சேர நாட்டைச் சேர்ந்தன என்பதை விளக்கும். கொங்கன்= கொங்குநாட்டரசன். கொங்கு நாடு கோயம்புத்தூர்க் கோட்டகப் பகுதி. கொல்லிமலை சேலங் கோட்டகத்தைச் சேர்ந்தது. சேரர் குடியில் ஒரு கிளையினரான அதிகமான் மரபினர் சேலத்தைச் சேர்ந்த தகடூரை(தர்மபுரியை)த் தலைநகராகக் கொண்டு ஆண்டனர்.

குற்றியலுகரத்தைப் புள்ளியிட்டுக் காட்டல், திதியைப் பக்க மென்றல் முதலிய பழந் தமிழ் வழக்கங்கள் இன்றும் மலையாள நாட்டில்தானுள்ளன.

தொன்று தொட்டுச் சேரநாட்டு மெலித்தல் திரிபுச் சொற்கள் சில சோழ பாண்டி நாடுகளிலும், இருவகை வழக்கிலும் வழங்கிவருகின்றன.

எ - டு: '**திரிநவும்**' (தொல். 483) பழுனி, (புறம். 113.) பழுனிய (மணி, 3 : 28) 'அறியுனன்' (புறம். 136.) திரிகின்ற — திரிகுன்ன — திரியுன்ன — திரியுன — திரின — திரிந) பழுத்து —பழுன்னு —பழுன்னி' — பழுனி—பழுநி. மகிழ்கின்றான் — மகிழுன்னுன்—மகிழுநன்—மகிழ்நன். வாழ்கின்றான்—வாழுன்னுன் வாழுநன்—வாழ்நன்—வாணன். இனி, திரியும்—திரியுன் + அ = திரியுன — திரின — திரிந என்றுமாம். இங்ஙனமே பிறவும். னகரத்தி

னும் நகரம் முந்தினதெனக்கொள்ளவும் இடமுண்டு. ஆங்கனம்—அங்கனம்—அங்ஙனம்—அன்னணம்

" ஆஓவாகும் பெயருமா ருளவே,
ஆயிடன் அறிதல் செய்யுளுள்ளே " (தொல். 680)

என்று கூறியதும் சேரநாட்டிற்கே சிறப்பாய் ஏற்கும்.

இவற்றால், பண்டை முத்தமிழ் நாட்டுத் தொடர்பையும், சேரநாட்டு வினை முற்றுக்கள் பாலீறு பெற்றதையும் அறியலாம்.

" ..................வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசையனும்
செங்குட்டு வன்றன் சினவலைப் படுதலும் "

என்று சிலப்பதி காரத்திலும்,

" வடதிசை யெல்லை யிமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ "

என்று பதிற்றுப் பத்திலும் பாடப்பட்டுள்ள சேர நாட்டுச் சீரிய மறம் இன்று ஆரிய அடிமைப்பட்டு அணுவளவுந் தமிழுணர்ச்சி யின்றிக் கிடப்பது நினைக்குந்தோறும் நெஞ்சைப் புண்படுத்துவதா யிருக்கின்றது.

### மலையாளம் திரிந்ததற்குக் காரணங்கள்.

(1) சேரநாடு பெரும்பாலும் மலைத்தொடரால் தடுக்கப்பட்டுப் பிற தமிழ் நாடுகளுடன் பெருந்தொடர்பு கொள்ளாதிருந்தமை.

(2) 12-ம் நூற்றாண்டோடு பாண்டிய மரபும் 13-ம் நூற்றாண்டோடு சோழ மரபும் சேர மரபுடன் மணவுறவு நிறுத்தியமை.

(3) வடமொழிக்கும் வடமொழியாளர்க்கும் தெய்வ உயர்வு கற்பிக்கப்பட்டமையும் வரம்பிறந்த வடசொற் கலப்பும்.

(4) மிகு மழையால் மலையாளியர்க்கு மூக்கொலி சிறந்தமை.

(5) மலையாளியர் முன்னோரின் செந்தமிழ் நூல்களைக் கல்லாமை.

(6) மலையாளியரின் ஒலிமுறைச் சோம்பல்.

## மலையாளம் திரிந்த முறைகள்.

(1) முற்று வினைகள் பால் காட்டும் ஈறிழத்தல்.

எ - டு : வந்தான் - வந்து.

(2) மெலித்தல் திரிவு.

எ - டு : எழுந்து - எழுந்நு, அங்கு - அங்ஙு, கழுகு - கழுங்ஙு, குஞ்சி - குஞ்ஞி, வீழ்ந்து - வீணு.

(3) நிகழ்கால வினை முற்றின் கின்றது என்னும் இடைநிலை உன்னு எனத் திரிதல்.

எ - டு : செய்கின்று - செய்குன்னு - செய்யுன்னு.

(4) வேற்றுமை யுருபுத் திரிவு.

எ - டு : அதினுக்கு - (அதின்கு) - அதின்னு, உடைய - உடே - டே - றே.

(5) போலித் திரிவு.

எ - டு : நரம்பு - ஞரம்பு, செய்ம்மின் - செய்வின்.

(6) கொச்சைத் திரிவும் தொகுத்தலும்.

எ - டு : உள்ள - ஒள்ள, மலை - மல, அகற்றுக - அகத்துக, இரு - இரி, புறா - ப்றாவு, கனா - கினவு, வேண்டும் - வேணம், செய்யவேண்டும் - செய்யேண்டு, போகவேண்டும் - போகேணம்.

(7) றகர ரகர வேறுபாடின்மை.

எ - டு : உறவு - உரவு.

(8) நிகழ்கால வினையெச்சத்திற்குப் பதிலாக 'வான்' 'பான்' ஈற்று வினையெச்சங்களும் அவற்றின் திரிபுகளும் வழங்கல்.

எ - டு : குடிப்பான் = குடிக்க, நடப்பான் - நடக்கான் = நடக்க, வருவான் - வர.

(9) சிறப்புச் சொற்கள் பொதுப் பொருளில் வழங்கல்.

எ - டு : வெள்ளம் (புதுப் பெருக்கு நீர்) = நீர், மூரி (கிழஎருது) = எருது, நோக்கு (கூர்ந்து பார்) = பார்.

(10) சொற்களை ஒரு மருங்கு பற்றிய பொருளில் வழங்கல்.

எ - டு : அதே = ஆம், வளரே = மிக, மதி = போதும், வலிய = பெரிய.

(11) ஒருபொருட் பல சொற்களில் தமிழில் வழங்காத ஒன்றை வழங்கல்.

எ - டு: சொல் (த.) - பறை (ம.); கூப்பிடு(த.) - விளி (ம.).

(12) ஆய் என்னும் வினையெச்ச வீறு ஆயிட்டு என வழங்கல்.

எ - டு: சிவப்பாய் - சிவப்பாயிட்டு.

(13) நெடுஞ் சுட்டு வழக்கு வீழாமை.

எ - டு: ஆயாள் (அவ் ஆள்), ஈ மூரி (இம் மூரி).

(14) ஏவல் வினைகள் பெரும்பாலும் வியங்கோள் வடிவில் வழங்கல்.

எ - டு: தா - தரிக, தர.

(15) துணை வினை வேறுபாடு.

எ - டு : பறையுவான் கழியும் (சொல்ல முடியும்), பறையுவான் கழியுன்னில்ல (சொல்ல முடியாது).

(16) செய்யும் என்னும் முற்று மூவிடத்தும் வழங்கல்.

எ - டு: ஞான், நீ, அவன் - போகும்.

(17) றன்னகரம் தந்நகரமாக எழுதப் படல்.

(18) வழக்கற்ற சொல் வழங்கல்.

எ - டு : கைநீட்டக் காசு, தம்பிராட்டி.

(19) புதுச் சொற்கள்.

எ - டு: மேடி = வாங்கு. வெடிப்பி = துப்புர வாக்கு.

(20) வினைமரபு வேறுபாடு. எ - டு; முட்ட புழுங்ஙுக (அவிக்க), விளக்கு கெடுக்க. (அணைக்க), முட்டுக் குத்துக (கொடுக்க), காலுற முறிக்க (வெட்டுக). மடங்ஙி (திரும்பி) வருக.

குறிப்பு :—சோநாட்டுக் கொடுந்தமிழாகிய மலையாளத்திலுள்ள இரு வகைத் தமிழ்ச் சொற்களையும் வழக்குவீழ்த்தற்கும் மலையாளத்தார் தமிழ்ச் சொற்களைக் கடன்கொண்டு அதனால் அவர்க்கும் தமிழர்க்கும் தொடர்பு ஏற்படாதபடியும், ஆரியர் வட சொற்களை மிகுதியாய்க் கலந்து மலையாளத்தைக் கெடுத்துத் தமிழுக்கு மிக அயன்மைப் படுத்திவிட்டனர்.

## மலையாளச் சொல் வரிசைகள்.

### (i) பெயர்ச் சொற்கள்

#### க. மூவிடப்பெயர்

| | தன்மை | முன்னிலை | படர்க்கை | தற்சுட்டு |
|---|---|---|---|---|
| ஒருமை : | ஞான் | நீ | அவன், இவன்<br>அவள், இவள்<br>அது, இது, | தான் |
| பன்மை : | நாம்<br>நம்மள்<br>ஞங்ஙள் | நிங்கள் | அவர், இவர்<br>அவ, இவ | தங்ஙள்<br>தாங்ஙள்<br>தாங்கள் |

#### உ. வினாப் பெயர்

| | ஆண் | பெண் | பொது | அஃறிணை |
|---|---|---|---|---|
| ஒருமை : | எவன் | எவள் | ஆர் | எது, யாது, எந்து |
| பன்மை : | | எவர், யாவர், | யார் | எவ, யாவ |

என்னது (த.)=எந்து (ம.)

ங. **முறைப் பெயர்.** அப்பன், அம்ம, அம்மாயி (பாட்டி), மகன், மகள், மருமகன், மருமகள், பேரன் முதலிய முறைப்பெயர்கள் செந்தமிழ்ச் சொற்களாகும்.

மூத்தச்சன், மூத்தப்பன், பேரப்பன்; மூத்தம்ம, மூத்தச்சி; வலியச்சன் (பெரியப்பன்), வலியப்பன், இளேயப்பன், குஞ்ஞச்சன் (சிற்றப்பன), பெண்ணப்பன் (மாமன்), பெண்ணம்ம (மாமி), கெட்டியவன் (கணவன்), கெட்டியவள் (மனைவி) முதலிய முறைப் பெயர்கள் கொடுந்தமிழ்ச் சொற்களாகும்.

ஜ்யேஷ்டன், ஜ்யேஷ்டத்தி, அனுஜன், அனுஜத்தி முதலிய வடசொற் பெயர்கள் வழக்கூன்றியதால், அண்ணன், அக்கை, தம்பி, தங்கை முதலிய செந்தமிழ்ப் பெயர்கள் மலையாளத்தில் வழக்கு வீழ்ந்தன.

அச்சி அப்பச்சி என்னும் ஒருபான் முறைப்பெயர்கள் செந்தமிழ் நாட்டில் சில குலத்தாரிடை வழங்குகின்றன. இவையும் இவற்றின் ஆண்பால் வடிவங்களான அச்சன் அப்பச்சன் என்பனவும் ஒருங்கே மலையாள நாட்டில்தான் வழங்குகின்றன.

குறிப்பு :- அத்தன் - அச்சன், அத்தி - அச்சி. த - ச, போலி.

௪. **மக்கட் பெயர்:** அடியார், அப்பக்காரன், அம்பட்டன், ஆள், ஆள் கொல்லி, இடயன், இரப்பாளி, இளயவன், உடயவன், ஊமன், எளியவன், கணியான், கள்ளன், கன்னியாள் குட்டி (பிள்ளே), குடியன், குருடன், கூலிக்காரன், கொல்லன், சக்கான் (செக்கான்), செவிடன், செறியவன் (சிறியவன்), தச்சன், தாந்தோன்னி (தான் றோன்றி) தூதன், தோழன், நல்லன், பாணன், பைதல் (பையன்), போக்கிரி, மடியன், மந்திரி, மலயாளி, முதலாளி, மூப்பன், வண்டிக் காரன், வம்பன், வலியவன், வழிப்போக்கன் முதலியன.

பறயுன்னவன் செய்யுன்னவன் முதலிய வினையாலணேயும் பெயர் களும், காணி தின்னி முதலிய செய்வான் பெயர்களுந் தமிழ்முறையி லமைந்தவையே.

௫. **விலங்குப் பெயர்:** ஆன (ஆனே) ஆடு, எரும (எருமை), ஒட்டகம், கழுத (கழுதை), வெருகு, காடி, கன்னு(கன்று), காலிகள், காள (காளே), குதிர (குதிரை), குரங்ந (குரங்கு), நரி, நாய், பன்னி (பன்றி), புலி, பூச்ச (பூசை=பூனே), மான், முயலு, மூரி, குறுக்கன் (குறுநரி).

௬. **பறவைப் பெயர்:** ஈச்ச (ஈ), கழுக (கழுகு), காக்க (காக்கை), குயில், கூமன் (கூகை), கொக்கு, செங்ஙாலி (செங்காலி =புறு), தாராவ (தாரா), பருந்து, பிடக்கோழி (பெட்டைக்கோழி), ப்ராவு (புறு), மயில், வண்டு, வாவல், தத்த (தத்தை=கிளி), கிளி.

௭. **ஊர்வனவற்றின் பெயர்:** இரிம்பு (எறும்பு), ஓந்து (ஓந்தி), எலி, கீரி, சுண்டெலி, தேள், பாம்பு, புழு, ஞாங்கூழ், சிதல்

௮. **நீர் வாழ்வனவற்றின் பெயர்:** ஞண்டு (நண்டு), தவள (தவளே), மீன், அயில (அயிரை), ஆரல், முதல (முதலே) முதலியன.

௯. **மரஞ்செடிப் பெயர்:** அவர (அவரை), ஆல், இஞ்சி, உழுன்னு (உழுந்து), எள், ஏலம், கருமுளகு, கீர (கீரை), செடி, செறு பயறு (சிறுபயறு), சேம்பு, சேன (சேனே), தெங்கு, நெல், படோல் (புடலே), பயறு, பருத்தி, பன (பனே), பிலாவு (பலா), புல், புளி, புகயில (புகையிலே), மாம், மஞ்ஞள் (மஞ்சள்), மா, முதிர (முதிரை=காணம்), முள்ளங்கி, வழுதுணங்காய் (=கத்திரிக்காய்), வாழ (வாழை), வெண்டக்க (வெண்டைக்காய்), வெள்ளரி வெற்றில (வெற்றிலே), பட்டாணிப்பயறு, உருளக்கிழங்கு, முந்திரிங்ங (முந்திரிகை), ஞாறு (நாற்று), கள (களே), ஞூறல் (=பிரம்பு), வேம்பு, ஞாணல், ஞாவல் (நாவல் முதலியன.

௧0. **கருவிப் பெயர்:** அரம், ஆணி, ஈர்ச்சவாள், உரலு, உலக்க (உலக்கை), ஏத்தம் (ஏற்றம்), உளி, கத்தி, கத்திரி, கரண்டி, கோட்டு (கொட்டு), கோடாலி, சக்கு (செக்கு), சாட்ட (சாட்டை), சுத்திக (சுத்திகை), சுழிக்குற்றி, சூலம், துடுப்பு, துருத்தி, நுகம், மழு, முள், மூலமட்டம், வாள்; வில், சூண்டல் (தூண்டில்), நங்கூரம் முதலியன.

௧௧. **ஐம்பூதப் பெயர்:** நிலம், வெள்ளம், தீ, காற்று, விண்ணு.

௧௨. **உலோகப் பெயர்:** இரிம்பு (இரும்பு), ஈயம், உருக்கு, செம்பு, தகரம், துத்தநாகம், பிச்சள (பித்தளை), பொன், வஜ்ரம் (வயிரம்), வெள்ளி.

௧௩. **ஊர்திப்பெயர்:** ஓடி, ஓடம், கப்பல், தேர், தோணி, படகு, வண்டி முதலியன.

௧௪. **உணவுப் பெயர்:** அரி (அரிசி), அப்பம், இர (இரை), இறச்சி (இறைச்சி), உப்பு, உற (உறை மோர்), ஊண், எண்ண (எண்ணெய்), கஞ்சி (கஞ்ஜி), கடுகு, கறி, சோறு, தயிர், தவிடு, தீன், தேன், நை (நெய்), பலஹாரம் (பலகாரம்), பால், மசால (மசாலை), மருன்னு (மருந்து), முட்ட (முட்டை), முளகுதண்ணி (மிளகு தண்ணீர்), மோர், வெண்ண (வெண்ணெய்) முதலியன.

௧௫. **ஆடையணிப் பெயர்:** உடுப்பு, கம்பிளி (கம்பளி), கால் சட்ட, காலுற (காலுறை), குப்பாயம், குடுத்த (குடித்துணி), சிலம்பு, செரிப்பு (செருப்பு,) தலக்கெட்டு, தலப்பாவு (தலைப்பாகை), துணி, துவால (துவாலை), பட்டு, பாவாட (பாவாடை), புடவ (புடவை), மோதிரம், மூக்குத்தி, வள (வளை) முதலியன.

௧௬. **தட்டு முட்டுப் பெயர்:** அண (அணை), கயிறு, கலம், கிண்டி (கெண்டி), குட (குடை), சட்டி, சாக்கு, தொட்டி, பலக (பலகை), பாய், மேச (மேசை), விளக்கு, சீப்பு, கண்ணடி, புஸ்தகம் (பொத்தகம்), கடியாரம், தட்டு, கிண்ணம், செம்பு, பொக்கணம், பெட்டி, முறம் முதலியன.

௧௭. **இடப்பெயர்:** அகம், அங்ஙாடி (அங்காடி), இட (இடம்), இற (இறவு), உல (உலை), எழுத்துப்பள்ளி (பள்ளிக் கூடம்), கடல், கர (கரை), கல்லற (கல்லறை), காடு, கிணறு, கிழக்கு, குடி (=வீடு), குடில், குழி, குளம், கோட்ட (கோட்டை), சுவர், தீவு, துறமுகம், (துறை முகம்), தெக்கு, தெரு, தோட்டம், நாடு, பட்டணம், பாற (பாறை), புறம், மல (மலை), மதிலு, மாளிக (மாளிகை), முற்றம், மூல

(மூல) லோகம் (உலகம்), வடக்கு, வயல், வழி, வாதில் (வாசல்), வானம், வீடு, குண்டு, அற (அறை), சேரி, இல்லம், கழனி, கேணி.

கஅ. காலப் பெயர் : காலம், சமயம், நாள், நேரம், பக்கம் (திதி) பகல், போழ் (போழ்து), மண்டலம், மணி, மாசம் (மாதம்), ராத்திரி (இராத்திரி), ராவு (இரா), ஞான்னு (ஞான்று) முதலியன.

கக. சினைப் பெயர்: இதள் (இதழ்), இல (இலே), ஈரல், உடல், எச்சில், ஓல (ஓலே), கண்ணு, கழுத்து, காம்பு, காய், கால், கை, குடல், குளம்பு, கொம்பு, சிரட்ட (சிரட்டை), சிறகு, செகிள், செதும் பல், செவி, சோர (சோரி=அரத்தம்), தச (தசை), தண்டு, தல (தலே), தல முடி, தளிர், துட (தொடை), தும்பிக்கை, தூவல் (தூவு), தோல், தோள், நரம்பு, நாடி, நார், நாவு, நெஞ்ஞு (நெஞ்சு), படம், பல்லு, பழம், பாள (பாளே), பித்தம், பூவு, மயிர், முகம், முல (முலே), முள், முள, (முளே), முழங்காலு, மீச (மீசை), முட்டு, மூக்கு, மொட்டு, ரத்தம் (அரத்தம்), வயிறு, வால், வித்து, விரல், வேர், அலர்.

உ०. பல்பொருட்பெயர். ஊஞ்சல், இடி, ஒலி, மெழுகு, பொடி, பேர், கூலி, மஷி (மை), சுமடு (சுமை), புக (புகை), மழ (மழை), சேறு, வில (விலே), வெளிச்சம், படம், பாடம், அச்சு, சாணகம் (சாணம்), கடம் (கடன்), சூது, துண (துணே), பட (படை), வெடி, மண், மணல், பணம், தூண், நூல், கல்லு, சுண் ணம்பு, உத்தரம், விட்டம், விறகு, கழுக்கோல், வாரி, ஓடு, பட்டிக (பட்டிகை), தலயண (தலேயணே), பூட்டு, தாக்கோல் (திறவுகோல்), துரும்பு, சாம்பல், திரி, கொக்க (கொக்கி), பச (பசை), சாடு, கூடு, குஞ்ஞு (குஞ்சு), கந்தகம், சுருட்டு, சவம், பந்தம், பந்து, பம்பரம், கொடி, வெண்சாமரம், மத்தளம், வெயில், வளம், சுடர், நுர (நுரை).

உக. குணப் பெயர் : அகலம், அயல், அளவு, அழுக்கு, ஆழம், இடுக்கு, இன்பம், உயரம், உரப்பு(=உறுதி), கரிப்பு, குற்றம், கைப்பு, சூடு, நீளம், பச்ச (பச்சை), மானம், வம்பு, வேகம், கடினம், சிவப்பு, வெள்ள (வெள்ளே) நன்ம, தின்ம (தீமை), பழம. புதும, நீலம் கருப்பு, மேன்ம, நாணம், வல்லம், முதலியன.

உஉ. நோய்ப் பெயர் : காச்சல் (காய்ச்சல்), குடலேற்றம், குடச்சல் (குடைச்சல்), குரு, சூல (சூலே), பக்க வாதம் முதலியன.

உ௩. எண்ணுப் பெயர்:

| ஒன்னு | பதினொன்னு | முப்பது |
|---|---|---|
| ரண்டு | பந்திரண்டு | நால்பது |

| | | | |
|---|---|---|---|
| மூன்னு | பதிமூன்னு | அம்பது | இரண்டாயிரம் |
| நாலு | பதிநாலு | அறுபது | மூவாயிரம் |
| அஞ்சு | பதினஞ்சு | எழுபது | ஐயாயிரம் |
| ஆறு | பதினறு | எண்பது | ஒம்பதிணுயிரம் |
| ஏழு | பதினேழு | தொண்ணூறு | பதிணுயிரம் |
| எட்டு | பதினெட்டு | நூறு | முப்பதிணுயிரம் |
| ஒம்பது | பத்தொம்பது | ஆயிரம் | நால்பதிணுயிரம் |
| பத்து | இருபது | எண்ணுயிரம் | லக்ஷம் (இலக்கம்) |
| | | | கோடி |

**கீழிலக்கம்:** காணி, மாகாணி, அரைக்கால், கால், அர (அரை) முக்கால்.

**எண்ணடி உயர்திணைப் பெயர்:** ஒருவர், இருவர், மூவர், நால்வர், ஐவர், அறுவர், எழுவர், பந்திருவர் (பன்னிருவர்), பதிணல்வர், நூற்றுவர் முதலியன.

உச. **தொழிற் பெயர்:**

(1) முதனிலைத் தொழிற்பெயர் :

எ - டு: அடி, பிடி, வெட்டு, களி, பணி.

(2) முதனிலை திரிந்த தொழிற்பெயர் :

எ - டு: ஊண், தீன், சூடு, போர்.

(3) முதனிலை திரிந்து விகுதிபெற்ற தொழிற்பெயர் :

எ - டு: தவி - தாகம், படி - பாடம்.

(4) முதனிலை வலியிரட்டித்த தொழிற்பெயர் :

எ. டு: ஆடு - ஆட்டு, பாடு - பாட்டு.

(5) முதனிலை வலியிரட்டித்து விகுதிபெற்ற தொழிற்பெயர் :

எ - டு: ஏறு - ஏற்றம், ஓடு - ஓட்டம்.

(6) விகுதி பெற்ற தொழிற்பெயர் :—

| விகுதி | தொழிற்பெயர் | விகுதி | தொழிற்பெயர் |
|---|---|---|---|
| அ(ஐ) | பக (பகை) | பு | பிறப்பு |
| அல் | துப்பல் | வு (உ) | வரவு |
| | விறயல் (விறையல்) | க (கை) | செய்க |
| சல் | பாச்சல் (பாய்ச்சல்) | | |
| தம் | பிடித்தம் | வி | கேள்வி |
| தி | பொறுதி | | |

(7) காலங்காட்டுந் தொழிற்பெயர் :

எ. டு: செய்தது, செய்யுன்னது, செய்வது

(8) எதிர்மறைத் தொழிற்பெயர் :

எ - டு: செய்யாய்க, அறியாய்க.

(9) பகுதி வழக்கற்ற தொழிற்பெயர் :

எ - டு: சண்டை.

(i) வினையாலணையும் பெயர்:—

தெரிநிலை: செய்தவன் செய்யுன்னவன், செய்வோன் முதலியன.

குறிப்பு: வலியவன், செறியவன், பழையது, புதியது முதலியன.

(ii) வினைச்சொற்கள்

க. சில முக்கிய வினைகள்

அகல் அஞ்சு அடி அடெ (அடை) அமிழ் அரி அர (அரை) அலறு அள அலி (அளி) அறி ஆகு ஆடு ஆழ் ஆள் இடறு இடி இடு இர இரு இருள் இறங்ஙு (இறங்கு) உடு உழு உணர் உதிர் உந்து உமிழ் உயிர் உரி உழு உறங்ஙு (உறங்கு) எடு எத்து (எய்து) எதிர் எழு எழுது ஏல் ஒலி ஒப்பு ஓம்பு ஓடு.

கடி கசக்கு கத்ரி (கத்தரி) கழி கழுகு (கழுவ) கர (கரை) கரை (=அழு) கவிழ் கற கன கா காணு காய் கிட குடி குத்து கெட்டு (கட்டு) கெடு கேள் கொடு கொத்து கொல் கோட்டாவிவிடு கோர் கோலு சாகு சார் சிரி சீந்து சும சுடு சுருள் சுழல் சூழு செத்து (செதுக்கு) செய் செல் சொறி ஞெளி (நெளி) தகு தங்ஙு (தங்கு) தவு தட்டு தணி தழுவு தள் தா (தரிக) தாளி தாண்டு தாழ் தின் தீர் துடெ (துடை) துடங்ஙு (தொடங்கு) துவர்த்து துற (திற) துப்பு (தும்மு) துளெ (துளை) தே (தேய்) தொழு தோல் தோன்னு (தோன்று) நட நக்கு நடு நக (நகை) நடுங்கு நம்பு நனெ (நனை) நர (நரை) நல்கு நாறு நிரத்து நில் நிவிர் (நிமிர்) நிறெ (நிறை) நீங்ஙு நீந்து நீள் நீற்று நுழ (நுழை) நூல் நெய் நோ நோக்கு நோல்.

பகெ (பகை) பரி (படி) பழு பற பறி பற்று பாடு பாய் பிரள் (புரள்) பிரி பிளர் பிற புகழ் புகு புளி புறப்பெடு பெறு பொறு போகு மற மறு மாறு மிகு மெதி (மிதி) மேய் ராகு (அராவு) வலிக்கு (இழு) வள (வளை) வறள் வற்று வா (வரிக) வாங்குபிடி விடு வித (விதை) வில் விளி விள (விளை) விற (விறை) வீழ் வீள் (மீள்) வெக்க (வைக்க) வெட்டு வெளிப்பெடு வேகு.

குறிப்பு:—மலையாள வினைகளெல்லாம் ஏவலாகும்போது பெரும்பாலும் வியங்கோள் வடிவு கொள்ளும்.

எ. டு: செய் - செய்யுக, தா - தரிக.

## வினைச்சொல் வடிவங்கள்.

| | தமிழ் | மலையாளம் |
|---|---|---|
| பகுதி | செய் | செய் |
| ஏவல் ஒருமை | செய் | செய்க |
| ,, பன்மை | செய்யும் | செய்க |
| | செய்ம்மின் | செய்வின் |
| இணையேவல் ஒருமை | செய்யட்டு | செய்யட்டே |
| ,, பன்மை | செய்யட்டும் | ,, |
| இறந்தகாலவினைமுற்று | செய்தான், செய்தாள் மு-ன. | செய்து |
| நிகழ் ,, ,, | செய்கின்றான், செய்கின்றாள் மு-ன. | செய்யுன்னு |
| எதிர் ,, ,, | செய்வான், செய்வாள் மு-ன. | செய்யும் |
| இறந்தகாலப் பெயரெச்சம் | செய்த | செய்த |
| நிகழ் ,, ,, | செய்கிற | செய்யுன்ன |
| எதிர் ,, ,, | செய்யும் | செய்யும் |
| எதிர்மறைப் ,, | செய்யாத | செய்யாத |
| இறந்தகால வினையெச்சம் | செய்து | செய்து |
| நிகழ் ,, ,, | செய்ய | செய்வான் |
| எதிர் ,, ,, | செய்யின் | செய்கில் |
| | செய்தால் | செய்தால் |
| எதிர்மறை வினையெச்சம் | செய்யாதே | செய்தாதெ |
| விதிவினை | செய்யவேண்டும் | செய்யயேணம் |
| விலக்கு ,, ,, | செய்யவேண்டாம் | செய்யேண்ட |
| செயப்பாட்டு வினை | செய்யப்படு | செய்யப்பெடு |
| ஆற்றல்வினை உடன்பாடு | செய்யமுடியும் | செய்வான்பாடுண்டு |
| ,, எதிர்மறை | செய்யமுடியாது | செய்வான் பாடில்ல |
| எதிர்மறையேவல் ஒருமை | செய்யாதே | செய்யருதெ |
| ,, பன்மை | செய்யாதேயும் | ,, |

குறிப்பு: —மலையாள வினைமுற்றுக்கள் திணைபால் காட்டா; ஆதலின், இரு திணையைம்பால் மூவிடங்கட்கும் பொதுவாம்.

### துணைவினைகள்

| துணைவினை | தமிழ் | மலையாளம் | பொருள் |
|---|---|---|---|
| கொள் | செய்துகொள் | செய்துகொள்ளுக | தற்பொருட்டு |
| ,, | செய்துகொண்டு | செய்துகொண்டு | தொடர்ச்சி வினையெச்சம் |
| இடு | செய்திட்டு | செய்திட்டு | இறந்த கால |

| | | | நிறைவு வினை யெச்சம் |
|---|---|---|---|
| வை | செய்துவை | செய்துவெக்க | செய்திருக்கை |
| விடு | செய்துவிடு | செய்துவிடுக | செய்து முடிக்கை |
| கொடு | செய்து கொடு | செய்து கொடுக்க | பிறர்க்குதவல் |
| தா | செய்து தா | செய்து தரிக | ,, |
| இரு | செய்திரு | செய்திரிக்க | செய்திருக்கை |
| வா | செய்து வா | செய்து வரிக | வினைத் தொடர்ச்சி |
| தீர் | செய்து தீர் | செய்து தீருக | செய்து முடிப்பு |
| இரு | செய்ய இரு | செய்வான் இரிக்க | தொடங்குநிலை |
| அருள் | செய்தருள் | செய்தருளுக | வேண்டுதல் |

## ஆகு என்னும் துணைவினை

| | | | |
|---|---|---|---|
| இறந்த காலம் : | ஞான் ஆயி | = | நான் ஆனேன் |
| | நீ ஆயி | = | நீ ஆனாய் |
| | அவன் ஆயி | = | அவன் ஆனான் |
| நிகழ் காலம் : | ஞான் ஆகுன்னு | = | நான் இருக்கிறேன் |
| | நீ ,, | = | நீ இருக்கிறாய் |
| | அவன் ,, | = | அவன் இருக்கிறான் |
| எதிர் காலம் ; | ஞான் ஆகும் | = | நான் இருப்பேன் |
| | நீ ,, | = | நீ இருப்பாய் |
| | அவன் ,, | = | அவன் இருப்பான் |

## இரு என்னும் துணைவினை (கலவைக்காலம்)

| | | | |
|---|---|---|---|
| இ. கா : | ஞான் செய்திருன்னு | = | நான் செய்திருந்தேன் |
| | நீ ,, | = | நீ செய்திருந்தாய் |
| | அவன் ,, | = | அவன் செய்திருந்தான் |
| நி. கா : | ஞான் செய்திருக்குன்னு | = | நான் செய்திருக்கிறேன் |
| | நீ ,, | = | நீ செய்திருக்கிறாய் |
| | அவன் ,, | = | அவன் செய்திருக்கிறான் |
| எ. கா : | ஞான் செய்திருக்கும் | = | நான் செய்திருப்பேன் |
| | நீ ,, | = | நீ செய்திருப்பாய் |
| | அவ ,, | = | அவன் செய்திருப்பான் |

## உண்டு இல்லை என்னும் துணைவினைகள்

| | |
|---|---|
| எனிக்குண்டு = எனக் குண்டு | எனிக்கில்ல = எனக்கில்லை |
| நிணக்குண்டு = உனக் குண்டு | நிணக்கில்ல = உனக்கில்லை |
| அவன்னுண்டு = அவனுக்குண்டு | அவனில்லை = அவனுக்கில்லை |

## அல்ல என்னும் துணைவினை

ஞான் அல்ல = நான் அல்லேன்
நீ அல்ல = நீ அல்லை
அவன் அல்ல = அவன் அல்லன்

குறிப்பு:—தமிழிலும் உலக வழக்கில் அல்ல என்னும் பலவின் பால் வடிவம் வழுவாக இரு திணையைம்பால் மூவிடங்கட்கும் பொது வாக வழங்கி வருகின்றது.

## சில புணர்வினைகள்

அடுத்துவா, உண்டாகு, காத்திரு, கொண்டுவா, பறஞ்ஞுவெக்க, வைத்திரு, வெளிப்பெடு, கொண்டுபோ, தாணுபோக.

## தன்வினை பிறவினை யாகும் வழிகள்.

(1) பகுதி வலி யிரட்டல் - எ. டு: உருகு - உருக்கு, உண்டாகு - உண்டாக்கு, மாறு - மாற்று,

(2) பகுதி (மெலி) வலித்தல் - எ. டு: கலங்கு - கலக்கு.

(3) விகுதி பெறுதல் - எ. டு: காண் - காணி (காண்பி) நீள்- நீட்டு, கடி - கடிப்பி, சும - சுமத்து, காய் - காச்சு (காய்ச்சு.)

## குறிப்புப் பெய ரெச்சங்கள்

வலிய (பெரிய), நல்ல, செறிய (சிறிய), பழய (பழைய), புதிய சில, பல, முதலியன,

குறிப்பு வினை யெச்சங்கள் - நன்னாயி, முழுவன், வேகம், முதலியன.

## இடைச் சொற்கள்

### க. வேற்றுமை யுருபுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1-ம் வேற்றுமை | மகன் | ஞான் | அவன் | வீடு |
| 2-ம் ,, | மகனெ | என்னெ | அவனெ | வீட்டினெ |
| 3-ம் ,, | மகனால், | என்னால், | அவனால், | வீட்டினால், |
| | மகனோடு | என்னோடு | அவனோடு | வீட்டினோடு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4-ம் | ,, | மகன்னு | எனிக்கு | அவன்னு | வீட்டின்னு |
| 5-ம் | ,, | மகனில் | என்னில் | அவனில் | வீட்டில் |
| | | நின்னு | நின்னு | நின்னு | நின்னு |
| 6-ம் | ,, | மகன்றெ | என்றெ | அவன்றெ | வீட்டின்றெ |
| 7-ம் | ,, | மகனில் | என்னில் | அவனில் | வீட்டில் |
| 8-ம் | ,, | மகனே | — | — | வீடே |

**சுட்டெழுத்துக்கள்**— அ, ஆ, இ, ஈ

**விற வெழுத்துக்க்ள்**—எ, யா, ஓ

**எண்ணிடைச் சொல்**—உம்

**உவம உருபு**—போலெ, கணக்கே.

**பால் விகுதிகள்—ஆ. பா:** அன், ஆன், ஆளன், ஆளி, இ, காரன், ஓன், மன்.

**பெ. பா:** அள், ஆள், அத்தி, அச்சி, ஆட்டி, ஆத்தி, இ, இச்சி, ஒள், காரத்தி, மி.

**ப. பா:** அர், ஆர், ஒ, கார், காரர்; மர், மார்.

**ஒ. பா:** அது, து.

**பல் பா:** கள், வ.

**சுட்டடிச் சொற்கள்**—அப்போள் (அப்போழ்து), அவிடே (அவ்விடை), அவ்விடம், அன்னு (அன்று), அங்ஙினே (அங்ஙனே), அங்ஙு, (அங்கு), அங்ஙோட்டு (அங்கிட்டு), இங்ஙனமே இகரச்சுட்டும்.

**விறவடிச் சொற்கள்**—எப்போள், எவிடே, என்னு (என்று) முதலியன.

**எண்முறை யொட்டு**—ஆம். எ-டு: ஒன்னும், ரண்டாம், பத்தாம், பதினெட்டாம், நூறும்.

**தொடர்ச் சொற்கள்:** முழம் இடுக, வெயில்தாழுக, இடவும் வலவும், அடவுகள் பிழெக்க, நல்ல அடி, வயிற்றின்னு அடிக்க, சொல் படிக்கு நடக்க, நாடு கடத்துக, நாற்றம் பிடிக்க, அறிமுகம் உண்டாக்க, நாள் போக்குக, நிறய உண்டிட்டு, அறுதி செய்க, நீந்திக் கரேறுக, நூல் ஓட்டுக, ஒன்னின்னும் ஆகா, பட்டிணி கிடக்குக, பள்ளி கொள்க, ஆஞ்சி நோக்குக, பழகிப் போயி, பழிவாங்ஙுக, ஆண யிடுக, பா விடுக, பாளயம் இறங்ஙுக, புறம் காட்டுக, உறக்கம் பிடிக்க, புகஞ்ஞு போயி, புடம் வெக்க, புடம் இடுக, வாயி பொத்துக, உள்ளத்தில் பற்றுக, மனம் பொறுக்க, வீடு எடுக்க, பொத்திப் பிடிக்க,

ஒழிச்சுதரிக (vacate), போயாண்டு, ஒருநாளு மில்ல, கடம் கொள்க, போக்கு வரவு, கடம் கொடுக்க, கடம் ஒழிக்க, போராதெ போக, குறியிடுக, மழ பெய்க, மழ நில்க்க, கணக்கு தீர்க்க, மாற்றம் செய்க, மாற்று மருன்னு, கப்பல் இறக்க, கப்பல் ஏறுக, மாலயிடுக, மினக் கெடுக, கப்பல் ஓட்டுக, கப்பம் கெட்டுக, காடாயி கிடக்க, தலமுடி வீழுக, முட்டக்கோழி, முறயிடுக, முறம் தூற்றுக, தீ காயுக, நிலாவு காயின்னு, மூக்கு சீந்துக, மூரிநிவிர்க, மேளம் கொட்டுக, மேல் கீழாக, கார்யம் நடக்க, மொட்ட அடிக்க, மோதிரக் கை, வயற்றுப் பாடு, கூட்டிக்கொண்டு போக, வல வீசுக, ஒருவழி கல்ப்பிக்க, வழியெ போயி, கைவிடுக, வழிவிடுக, வாரிக் கொடுக்க, உப்பு விளயிக்க, விட கொடுக்க, விடகொள்க, விடவாங்ஙுக, வில ஏறுக, தாகம் தீர்க்க, விளக்கு வெக்க, வீறுகாட்டுக, வெறும் வயிற்றில், வெள்ள வீசுக, வேலி அடைக்க, வேலி கெட்டுக, தாங்ஙி பறக, தாணு கொடுக்க, முட்டெக்கு உலாவுக, திக்கு முட்டுக, நாவெடுத்து பறக, உள்ளது கொடுக்க, நோன்பு நோல்க்க, நோன்பு காக்க, மங்களம் கூறுக, மணி தட்டுக, மதிகெடுக்க, மறுமுகம் நோக்க, காடு மறஞ்ஞு பார்க்க, கூட்டிப் பழக, மிழுங்ஙிப் பறக, கெட்டி நில்குன்ன வெள்ளம், முகத் திட்டடிக்க, கோட்டாவி இடுக, கண்டிச்சு பறக, மொழியும் மொழி கேடும், சம்மணம் குத்தி இரிக்க, வழி பிரெக்க, சாடி வீணுகடிக்க, சாகாதது எல்லாம் தின்னுக, வாட்டம் பிடிக்க, (ஒரு பக்கம் சாய்க பெண்ணினெ வாழிக்க, (வாழ்விக்க), புறத்தாக வண்டிகெட்டு' தீன்பண்டம், என்னென்னேக்கும் (என்றென்றைக்கும்), பிறவிக் குருடன், பால் காச்சு, இடவிடாதெ, கள பறி, தீப்பெட்டி முதலியன.

**பகிர்வுப் பெயர் :** ஓரோன்னு (ஒவ்வொன்று), ஈரண்டு (இவ் விரண்டு), மும் மூன்னு, நன்னலு, அய்யஞ்சு; பதுப்பத்து (பப்பத்து).

**மரபுத் தொடர்கள் :** அகவும் புறவும் நோக்க, அவன் துலஞ்ஞு போயி, அதின்றெ இப்புறவும் அப்புறவும் நோக்காதெ, உருட்டும் பிரட்டும் பறக, பொத்திப் பொதிஞ்ஞுவைக்க, எனிக்கு எந்து போயி, கடிகூடி என்னு பறக, கணக்கும் கார்யவும், கண்ணு மிழிக் குன்னதின் மும்பே, காககண்டவன், முகம் முறிச்சு பறக, களவும் கய்யுமாயகப் படுக, ஒருநாள் முங்கூட்டி, காடு வாவா வீடு போபோ என்னு பறயுன்ன காலம், காணிச்சுக் கொடுக்க, நின்றெ முகத்துமீச முளச்சிட்டில்லே, அவன்றெ கார்யம் கழிஞ்ஞு, இதில் கார்யம் ஒன்னு மில்ல, மற்றொருத்தன் சொல்ப்படிக்கு நடக்குன்னவன், ரண்டும் கெட்ட, ஒரு கையாயிருக்க, கைகண்ட, வெட்டாவெளிச்சம், சூசி முனயெ கொண்டு குத்துவானுள்ள நிலம் கொடுக்குன்னில்ல, ஊரும்

உடலும் இல்ல, என்றெ வீட்டில் எச்சிலும் குப்பயும் ஆயி, இவன் ஒரு ஆணி ஆகுன்னு, ஒன்னும் இறங்ஙாத சமயம், உந்தும் தள்ளும் (அடிபிடி), நஞ்சு தின்னபோலே ஆயி, வந்தி ஏந்திக்கொண்டு நடக்க, கண்ணிம கூட்டியில்ல, உந்தலும் பிடியுமாக, காகாணுக, உடல் ஒம்பதுசாணும் விறெக்க, ரண்டு கையிலும் சிரட்ட பிடிச்சு போக,

**வாக்கியங்கள்** (சொற்றொடர்கள்)

ஞான் ஆ ஆளோடு ஈ குதிரயெ வாங்கி=நான் அவ் ஆளிடம் இக்குதிரையை வாங்கினேன்.

அச்சன் பறப்பெட்டுபோய சேஷம் ஒருத்தன் வந்து என்றெ சோறு தின்னு=அத்தன் (அப்பன்) புறப்பட்டுப் போனபின்பு ஒருத்தன் வந்து என்னுடைய சோற்றைத் தின்றான்.

என்றெ செரிப்பு வெடிப்பாக்கேணம் என்னு ஞான் திவஸந்தோறும் கல்பிக்குன்னெங்கிலும், நீ இது ஒரிக்கலும் நன்னாயி செய்யாறில்ல=என்னுடைய செருப்பைத் துப்புரவாக்க வேண்டுமென்று நான் நாள்தோறும் சொன்னாலும் நீ இதை ஒருகாலும் நன்றாய்ச் செய்கிறதில்லை.

**பழமொழிகள்** (பழஞ்சொல்-ம.)

அகத்திட்டால் புறத்தறியாம்.
அரி (அரிசி) எறிஞ்ஞால் ஆயிரம் காக்க.
அளவு கடன்னால் அம்ருதும் நஞ்சு.
ஆகும் காலம் செய்தது சாகும் காலம் காணும்.
ஆயிரம் மாகாணி அறுபத்து ரண்டர.
இக்கரனின்னு நோக்கும்போள் அக்கர பச்ச.
இரிம்பூர கல்லும் தேயும்.
ஈர் எடுத்தால் பேன் கூலியோ.
கடலில் காயம் கலக்கியது போலெ.
காமத்தின்னு கண்ணில்ல.
காற்றுள்ள போள் தூற்றணும்.
கார்யத்தின்னு கழுத காலும் பிடிக்கேணம்.
குரங்ஙின்றெ கய்யில் பூமால கிட்டியதுபோலெ.
குரக்குன்ன நாயி கடிக்கயில்ல.
கோடாதெ காணி கொடுத்தால் கோடி கொடுத்த பலம்;
கோடி கோடி கொடுத்தால் காணி கொடுத்த பலம்.
தாழே கொய்தவன் ஏறே சுமக்கேணம்.
தீயில்லாதெ புகயுண்டாக யில்ல.

நரி நரெச்சாலும் கடிக்கும்.
நிலாவினெ நோக்கி நாயி குரக்கும்போலெ.
பலதுள்ளி பெரு வெள்ளம்.
மாத்தின்னு காயி கனமோ ?
மருன்னும் விருன்னும் மூன்னு நாள்.
மலர்ன்னு கிடன்னு துப்பியால் மாறத்து விழும்.
மீங்கண்டம் வேண்டாத பூச்சயில்ல.
ரண்டு தோணியில் கால் வெச்சுது போலெ.
தாழ = அடியில். ஏற = மிகுதியாக.

## ஒரு கதை

ஒரு அக்ரஹாரத்தில் ஒரு பிராமணன் பார்த்திருன்னு. அவன்னு மகன் ஒன்னே உண்டாயிருன்னு. ஒரு நாள் அவன் ஒரு வழிக்கு யாத்ர புறப்பெட்டு, மகனெயும் கூட்டிக்கொண்டு போயி. வழியில் வெச்சு ஆசெறுக்கன் அச்சனெ விளிச்சு, "அய்யோ! புலி வருன்னு" என்னு உறக்கே நிலவிளிச்சு. அச்சன் திரிஞ்ஞு நோக்கியபோள் புலியெ கண்டில்ல. அவர் பின்னேயும குறய தாரம் போயபோள் வாஸ்தவத்தில் ஒரு புலி வன்னு செறுக்கனெ பிடிச்சு. ஆ செறுக்கன் வீண்டும் அச்சனெ விளிச்சு. தன்றெ மகன் மும்பேபோலே களி வாக்க பறயுன்னு என்னு விசாரிச்சு திரிஞ்ஞு நோக்கியில்ல. புலி செறுக்கனெ கொன்னு தின்னு.

## இதன் சொன் மொழிபெயர்ப்பு

ஒரு பார்ப்பனச் சேரியில் ஒரு பார்ப்பான வதிந்திருந்தான். அவனுக்கு மகன் ஒருவனே உண்டாயிருந்தான். ஒரு நாள் அவன் ஒரு வழிப்போக்குப் புறப்பட்டு மகனையுங் கூட்டிக் கொண்டு போனான். வழியில் வைத்து அச்சிறுக்கன் (சிறுவன்) அத்தனை (அப்பனை) விளித்து, " ஐயோ ! புலி வருகிறது " என்று உரக்கக் கத்தினான். அத்தன் திரும்பி நோக்கிய போழ்து புலியைக் கண்டிலன். அவர்கள் பின்னேயும் குறைந்ததொலைவு போய போழ்து உண்மையில் ஒரு புலி வந்து சிறுக்கனைப் பிடித்தது. அச்சிறுக்கன் மீண்டும் அத்தனை விளித்தான். தன்னுடைய மகன் முன்பேபோல விளையாட்டுக்குச் சொல்கிறான் என்று எண்ணித் திரும்பிப் பார்க்க வில்லை. புலி சிறுக்கனைக் கொன்று தின்றது.

குறிப்பு:—சிறுக்கன் (ஆ. பா.) — சிறுக்கி (பெ. பொ.). தமிழில் 'சிறுக்கன்' செய்யுள் வழக்கு ; 'சிறுக்கி' உலக வழக்கு. களி(ம.) = விளையாட்டு(த.).

## II. கன்னடம்

### கன்னடம் என்னும் பெயர்

மலையாளத்திற்கு அடுத்துத் தமிழோடு தொடர்புள்ளது கன்னடம். கன்னடம் என்பது கருநடம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. இது முதலாவது கன்னட நாட்டைக் குறித்துப் பின்பு அங்கு வழங்கும் மொழியைக் குறித்தது. இதன் பழைய வடிவங்கள் கருநாடு கருநாடகம் என்பன. கன்னட நாட்டார் கருநாடர் என்றும் கருநடர் என்றும் அழைக்கப்பட்டார்.

கருநடம் அல்லது கருநாடகம் என்னும் சொல்லுக்கு இருபொருள்கள் கூறப்படுகின்றன. அவை (1) கரிய நாடு (2) கருங்கூத்து என்பன.

கன்னட நாட்டிற் பெரும்பகுதி கரிசல் நிலமாயிருப்பதால், கரியநாடு என்று பொருள் கொண்டனர் குண்டெட் பண்டிதரும் (Dr. Gundert). கால்டுவெல் கண்காணியாரும்.

கூத்துக்களில் இழிந்த வகைக்குக் கருங்கூத்து என்று பெயர்.

> "முதுபார்ப்பான் வீழ்க்கைப்பெருங் கருங்கூத்து"
> (கலி. 65: 29).

நடம் = கூத்து. நடன் = கூத்தன்.

> "வளிநடன் மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க"
> (பரிபா. 22: 42)

நடர் = கூத்தர்.

> "விடரும் தூர்த்தரும் நடரும் உள்ளிட்ட"
> (குறள். பரிமே. உரை)

நாடகம் = கதை தழுவிவரும் கூத்து. மிகப் பழைமையான அநாகரிக அல்லது கண்மூடிப் பழக்கத்தைப் "பழைய கருநாடகம்" என்பர்; இங்கு 'கருநாடகம்' என்பது பழைமையான அநாகரிகத்தைக் குறிக்கலாம்.

ஆகவே, கருநடம், அல்லது கருநாடகம் என்னும் பெயர் கருங்கூத்து நிகழும் நாடு என்னும் பொருள் கொண்டதாயிருக்கலாம். சிலப்பதிகாரத்தில் கருநாடர் குறிக்கப்படும் போதெல்லாம் திருந்தாமையைக் குறிக்கும் 'கொடு' என்னும் அடை கொடுத்தே குறிக்கப்படுகின்றனர்.

"கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்"
(சிலப். 25: 156)

"கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடரும்"
(சிலப். 26: 106)

இன்றும் 'யக்ஷகணம்' என்னுங் கருங்கூத்து கன்னட நாட்டில் நடிக்கப்பட்டு வருவதாகக் கூறப்படுகின்றது.

ஆயினும், கருநடரைக் கருநாடர் என்னும் வழக்கும் உண்மையானும், கூத்தாகிய காரணத்தினும் நிலவகையாகிய காரணம் பெயர்ப்பேற்றிற்குச் சிறத்தலானும், கரிசற்பாங்கான நாடு என்று பொருள் கொள்வதே பொருத்தமாம். கரைநாடு என்பது கருநாடு என மருவிற்றென்பர் சிலர்.

**கன்னட நாட்டெல்லை :** தெற்கே நீலமலை (நீலகிரி)யிலிருந்து வடக்கே பீடார்ப் (Bidar) பகுதி வரை மைசூர் கன்னடம் தென்மராட்டம் (மகாராஷ்டிரம்) ஐதராபாத்தின் தென்மேற்குப் பகுதி ஆகிய சீமைகளிற் பெரும்பாலும் தாய்மொழியாகப் பேசப்படுவது கன்னடம்.

நீலமலையிலுள்ள படகர் (வடகர்) என்னும் மலைவாணர் கன்னடத்தின் திரிபான ஒரு மொழியைப் பேசுகின்றனர்.

16-ம் நூற்றாண்டில் தென்னாட்டிற்கு வந்த மகமதிய மன்னர், அற்றைத் தமிழ் நாட்டின்மேற் கருநட மன்னர் ஆணை செலுத்தியமை காரணமாகத் தமிழ்நாட்டையும் கன்னட நாட்டோடு சேர்த்துக் கர்நாட்டக் (கருநாடகம்) என்றனர். அதை ஆங்கிலேயர் கர்நாட்டிக் (Carnatic) என்று திரித்தனர்.

**கன்னட நாட்டு வரலாறு :** கன்னட நாட்டிற் சிறந்த பகுதி மைசூர்ச் சீமையாகும். மைசூரில் தற்போது ஹலெபீடு (Halebid) என வழங்கும் துவரை நகர் (துவார சமுத்திரம்) கி. மு. 2000 ஆண்டுகட்கு முன்னர் செந்தமிழ் நாட்டைச் சேர்ந்ததாயிருந்தது. இது துவராபதி எனவும் வழங்கும்.

நச்சினார்க்கினியர், "அகத்தியனார்...........துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரை யும் அருவாளரையுங் கொண்டு போந்து காடுகெடுத்து நாடாக்கி" எனத் தொல்காப்பியப் பாயிரவுரையிலும், "மலையமாதவன் நிலங்கடந்த நெடுமுடியண்ணலுழை நர பதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும்" என அகத்திணையியல் 32-ம் நூற்பா வுரையி லும் கூறியுள்ளார்.

பண்டைச் சேரநாட்டில் மைசூர்ச் சீமையின் தென் பகுதியும் சேர்ந்திருந்தது.

கடைக்கழகக் காலத்தில் மைசூர்த் துவரை நகரை ஆண்டவன் **இருங்கோவேள்** என்னும் தமிழச் சிற்றரசன். அவன் வடபக்கத்தில் ஒரு முனிவரின் ஓம குண்டத்தில் தோன்றித் துவரை நகரை நாற்பத்தொன்பது தலைமுறை யாகத் தொன்றுதொட்டு ஆண்டுவந்த வேளிர்களுள் ஒரு வன் என்றும், ஒரு முனிவர் தவஞ்செய்து கொண்டிருக் கையில் அவர்க்கு இடையூறு செய்யவந்த ஒரு புலியை அவர் ஏவற்படி கொன்றமையால் **புலிகடிமால்** எனப்பட்டா னென்றும் கூறப்படுவன்.

> "நீயே, வடபான் முனிவன் தடவினுட் டோன்றிச்
> செம்பு புனைந்தியற்றிய சேணெடும் புரிசை
> உவரா வீகைத் துவரை யாண்டு
> நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
> வேளிருள் வேளே விறற்போ ரண்ணல

தாரணி யானைச் சேட்டிருங் கோவே
ஆண்ட னுடைமையிற் பாண்கட னாற்றிய
ஒலியற் சண்ணிப் புலிகடி மாஅல்''

(புறம். 201).

என்று கபிலர் பாடுதல் காண்க.

இப்பாட்டின் அடிக்குறிப்பில், "தபங்கரென்னு முனிவர் ஒரு காட்டில் தவஞ்செய்கையில் ஒரு புலி அவர்மேற் பாய்தற்கு நெருங்க, அதுகண்ட அம்முனிவர் அங்கு வேட்டையாடி வந்த சளனென்னும் யாதவ அரசனை நோக்கி 'ஹொய் ஸள' என்று கூற, அவன் அப்புலியைத் தன் அம்பால் எய்து கடிந்தமையால் ஹொய் ஸளனென்றும் புலிகடிமாலென்றும் வழங்கப்பட்டானென்று சிலர் கூறுவர்; சசகபுரத்தையடுத்த காட்டிலுள்ள தன் குல தேவதையான வாஸந்திகா தேவியைச் சளனென்னும் அரசன் வணங்கச் சென்றபோது புலியால் தடுக்கப்பட்டு வருந்துகையில், அக்கோயிலிலிருந்த பெரியவர் அவனை நோக்கி 'ஹொஸ் ஸள' என்று கூறி ஓர் இருப்புத் தடியை அருள, அவன் அது கொண்டு அதனைக் கொன்றமை பற்றி, 'ஹொய் ஸளன்' என்றும் 'புலிகடிமால்' என்றும் பெயர் பெற்றனனென்று வேறு சிலர் கூறுவர்'' என்று சாமிநாதையர் அவர்கள் வரைந்துள்ளனர்.

பிற்காலத்தில் 11-ம் நூற்றாண்டில் துவார சமுத்திரத்தில் (Habbid) நிறுவப்பட்ட ஹொய்சள பல்லாள மரபு கடைக் கழகக் காலப் புலிகடிமாலின் வழியதே. பல்லாளன் என்னும் பெயர் வல்லாளன் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. வ - ப, போலி. ஒ. நோ: வண்டி—பண்டி, வகு—பகு. வல்லாளன் = வலிய ஆண்மையையுடையவன். ஒரு மறவனுடைய இல்லையும் ஊரையும் இயல்பையும் சொல்லி அவன் ஆண்மைத் தன்மையை மிகுத்துக் கூறும் புறத்துறைக்கு வல்லாண்முல்லை (பு. வெ. 177) என்று பெயர்.

"நள்ளாதார் மிடல்சாய்த்த
வல்லாளநின் மகிழிருக்கையே"

(புறம். 125)

எனத் தேர்வண்மலையனும்,

" விசைத்தெறி கூடமொடு பொருஉம்
உலைக்கல் லன்ன வல்லா ளன்னே." (புறம். 170)

எனப் பிட்டங் கொற்றனும்,

" அடிபொலியக் கழறைஇய
வல்லாளனை வயவேந்தே" (புறம். 40)

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனும் பாடப்பட்டனர்.

கடுந்திறமையுள்ள இருபாலாரையும் வல்லாள கண்டன் வல்லாள கண்டி எனப் புகழ்வது இன்றும் தமிழ்நாட்டுலக வழக்கு.

திருவண்ணாமலையில் வல்லாள மகாராசன் என்னும் ஓர் அரசன் இடைக்காலத்தில் ஆண்டதாக அருணாசலபுராணம் கூறும்.

"மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கும் அரபிக்கடலுக்குக் கிழக்கும் கூர்ச்சரத்திற்குத் தெற்கும் கோவாவுக்கு வடக்குமாக" வுள்ள கொங்கண தேசம் பண்டைக் காலத்தில் கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்றாயிருந்ததாக இலக்கண நூல்கள் கூறும்.

" கன்னித் தென்கரைக் கட்பழந் தீவம்
சிங்களம் கொல்லம் கூவிளம் என்னும்
எல்லையின் புறத்தவும் ஈழம் பல்லவம்
கன்னடம் வடுகு கலிங்கம் தெலிங்கம்
கொங்கணம் துளுவம் குடகம் குன்றம்
என்பன குடபால் இருபுறச் சையத்
துடனுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும்
முடியுடை மூவரும் இடுநில வாட்சி
அரசு மேம்பட்ட குறுநிலக் குடிகள்
பதின்மரும் உடனிருப் பிருவரும் படைத்த
பன்னிரு திசையில் சொன்னய முடையவும்."

என்றார் அகத்தியனார்" என்பது நன்னூல் மயிலைநாதருரை (பக். 161). இவ் அகத்திய நூற்பாவிற் கூறப்படும் பெயர்கள் முதலாவது நாட்டைக் குறித்தவை யென்றும் பின்பு மொழிதிரிந்தபின் மொழியையுங் குறித்தனவென்றும் அறிதல் வேண்டும்.

சேரநாடு கடைக்கழகக் காலத்திலேயே குட (மேற்குத் தொடர்ச்சி) மலைக்கு மேற்பால் வேறும் கீழ்ப்பால் வேறுமாகப் பிரிந்து போயிற்று. கீழ்ப்பால் நாடு மீண்டும் தெற்கில் கொங்குநாடும் வடக்கில் கங்கநாடும் இடையில் அதிகைநாடு துவரைநாடு முதலியனவுமாகப் பிரிந்துவிட்டது. அதிகைநாடு தகடூரை (இற்றைத் தர்மபுரியை)த் தலைநகராகக் கொண்டு அதிகமான் மரபினர் ஆண்டு வந்தது. கங்கநாடு அதன் வடக்கில் கங்கமரபினர் குவளாலபுரத்தை (கோலார்)த் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தது. இது **கங்கபாடி** என்று கல்வெட்டுக்களிற் கூறப்படும்,

"வெங்கை நாடுங் கங்கபாடியும்" (S. I. I. i, 94).

கங்க மரபினரான சிற்றரசர் கடைக்கழகக் காலத்திலேயே மறத்திற் சிறந்து பெயர் பெற்றவராயிருந்தனர்.

"நன்ன னேற்றை நறும்பூ ணத்தி
துன்னருங் கடுந்திறற் **கங்கன்** கட்டி" (அகம். 44)
"பங்களர் **கங்கற் பல்**வேற் கட்டியர்" (சிலப். 25 : 157)

எனப் பழைய நூல்கள் கூறுதல் காண்க.

இக்கங்க மரபைச் சேர்ந்தவனே, 12-ம் நூற்றாண்டில் மூன்றாங் குலோத்துங்க சோழன் காலத்தவனும், 'அமராபரணன்' 'ஸ்ரீமத்குவளாலபுர பரமேசுவரன்' 'கங்ககுலோற்பவன்' என்று தன் மெய்க் கீர்த்திகளிற் பாராட்டப்பெறுபவனும், பவணந்தி முனிவரைக் கொண்டு **நன்னூலை** ஆக்குவித்தவனுமாகிய **சீயகங்கன்** என்பவன். இவன் ஒரு தமிழிலக்கணத்தை இயற்றுவித்ததினாலும், நன்னூற் சிறப்புப்பாயிரம்,

"குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையின் இருந்தமிழ்க் கடலுள்"

என்று கூறுவதாலும், மைசூர் நாட்டில் வேங்கட நேர் எல்லைவரை 12-ம் நூற்றாண்டு வரையுமாவது தமிழ் தவிர வேறொரு மொழியும் வழங்கவில்லை யென்பது அறியப்படும்.

ஆகவே, பம்பாய் மாகாணமும் ஐதராபாத்துச் சீமையும் சென்னை மாகாணமும் கூடுகின்ற இடத்துக் கொடுந் தமிழ் வழக்கு, வடசொற் கலப்பால் 6-ம் நூற்றாண்டிற்குப் பின் கன்னடமென வேறு மொழியாகப் பிரிந்து, பின்பு சிறிது சிறிதாகத் தெற்கே தள்ளிவந்து தற்போது நீலமலை வரை பரவியுள்ளதென்க.

"கொங்கணர் கலிங்கர் கொடுங்கரு நாடர்"

"கொங்கணக் கூத்தருங் கொடுங்கரு நாடரும்"

என்று சிலப்பதிகாரங் கூறுவதால், கொங்கண நாட்டைச் சேர்ந்த கருநட நாட்டிலேயே கன்னடம் முதலாவது தோன்றியிருத்தல் வேண்டும். இப்போதும் கொங்கண நாட்டிற்கும் மலபாருக்கும் இடைப்பட்ட மேல்கரை நாடே, தென் கன்னடம் வட கன்னடம் என இரு பகுதியாய்ப் பகுக்கப்பட்டுக் கன்னடம் (Kanara) என்னும் பெயரால் வழங்கி வருகின்றது. வட கன்னடம் கொங்கண நாட்டுப் பகுதியே. இதனால், கரைநாடு என்பதே கருநாடு என மருவிற்று என்று கொள்ளவும் இடமுண்டு.

கொங்கணம் என்பது கொண்கனம் என்னும் சொல்லின் திரிபு. கொண்கன் என்பது நெய்தல் நிலத் தலைவன் பெயர். கொங்கணம் ஒரு நெய்தல் நாடாதலால், கொண்கு (நெய்தல்நிலம்) என்னும் பெயர் முறையே கொண்கனம்—கொங்கணம் என்று திரிந்திருக்கலாம். கொங்கண நாட்டினர், கொங்கணர் என்றும் கொங்கணவர் என்றும் கொங்கணியர் என்றும் கூறப்படுவர். கொங்கணவர் என்று ஒரு பண்டைத் தமிழ்ச் சித்தர் இருந்தார்*.

---

* கொங்கண முனிவர் வாசுகியம்மையாரால் கடிந்துகொள்ளப் பட்டதினாலோ, கொங்கண நாட்டாரின் இயல்பான பேதைமையாலோ, கொங்கணன் கொங்கணவன் கொங்கணியன் என்னும் பெயர்கள் பேதைமை குறித்த பெயர்களாக வழங்கி வருகின்றன.

மைசூர்ச் சீமையிலுள்ள பலவூர்கள் இன்றும் தமிழ்ச் சொற்களையே தம் பெயரீறாகக் கொண்டுள்ளன. எ-டு: ஊர் (மைசூர்), புரம் (குவளாலபுரம்), பள்ளி அல்லது ஹள்ளி (சிக்னவகன்ஹள்ளி) பட்டினம் (சீரங்க பட்டினம்) கரை (அரிசிக்கரை), பேட்டை முதலியன. கன்னட நாட்டிலுள்ள கௌடர், (கவுண்டர்) திகழர் (தமிழர்), குறும்பர், உப்பாரர், கொரகர் (குறவர்), ஹொலியர் (புலையர்) பேடர் (வேடர்) முதலிய குலத்தினர் தமிழ் மரபினரே. கன்னடியர் என்னும் பெயரும் மொழி பற்றிக் குலங்குறித்த தமிழ்ச் சொல்லே. மைசூர் அரசரின் இற்பெயரான **உடையார்** என்பது தனித் தமிழ்ச் சொல்லா யிருப்பது மிக மிக மகிழத் தக்கது.

## கன்னடம் திரிந்ததற்குக் காரணங்கள்

(1) கன்னடச் சீமையில் தமிழ் மன்னராட்சி ஒழிந்தமை.

(2) அங்கு தமிழ் நூல்கள் வழங்காமை.

(3) தமிழர் விழிப்பின்மை.

(4) தட்ப வெப்ப நிலையால் தமிழ் ஒலியும் சொல்லும் திரிந்தமை.

(5) வடசொற் கலப்பும் வடமொழியிலக்கண வமைப்பும்.

## கன்னடம் திரிந்த முறைகள்

(1) ஒலித்திரிபு.
எ-டு: ப - ஹ, பள்ளி - ஹள்ளி, பாடு - ஹாடு.

(2) உயிரீற்றுப் பேறு.
எ-டு எதிர் - எதுரு, இருந்தேன் - இருத்தேனெ.

(3) தொகுத்தல் திரிபு.
எ-டு: இருந்தேன் - இத்தேன, இருவர் - இப்பரு.

(4) புணர்ச்சியின்மை.
எ-டு: நினக்கு - நினகெ, ஓலைக்காரன் - ஓலகார.

(5) சொற்றிரிபு.
எ-டு: மொதலானய, மத்தொந்து (மற்றொன்று), இல்ல.

(6) வேற்றுமையுருபு மாற்றம்.
நின்னிந்த (3-ம் வே.), நின்னல்லி (7-ம் வே.)

(7) போலி.
எ - டு : ப - வ, வேடர் - பேடரு; ச - க, சில - கெலவு.

(8) எதிர்மறை யிடைநிலைக் குறுக்கம்.
எ - டு : இராதே - இரதெ, இரேன் - இரெனு.

(9) பொருட் பொதுப்பித்தல்.
எ - டு : நோடு (த.)=கவனித்துப் பார்—(க.)=பார்.
மாட்டுதல் (த.)=செய்ய முடிதல்—மாடுதல் (க.)=செய்தல்.

(10) இனப்பொருள் வழக்கு,
எ - டு : சிக்கு (த.)=சிக்கற்படு—(க.)=அகப்படு.

(11) வழக்கற்ற சொல் வழக்கு.
எ - டு : திங்கள் (மாதம்), தெகு (தெவு=கொள்).

(12) நெடுஞ்சுட்டு வழக்கு வீழாமை.
எ - டு. ஈ ஹண்ணுகளு.

(13) இயற்கைத் தெரிப்பு.
எ - டு : மனெ (மனை),

(14) புதுச்சொற் புனைவு.
எ - டு : படவனு (ஏழையன்) கிசி (பற்காட்டு)

(15) பெயரீற்றுப்பால் விகுதிக் கேடு.
எ - டு : குருட (குருடன்), மக (மகன்).

(16) ஓசைப்பேறு.
எ - டு : மக (g), அஜ்ஜி. (அச்சி)

(17) ற ழ அருகினமை.

(18) வட சொற்கலப்பு.

## கன்னடச் சொல் வரிசைகள்

க. மூவிடப் பெயர்

| | தன்மை | முன்னிலை | படர்க்கை | தற்சுட்டு |
|---|---|---|---|---|
| ஒருமை : | நானு | நீனு | அவனு, இவனு<br>அவளு, இவளு<br>அது, இது | தானு |

| | | | | |
|---|---|---|---|---|
| பன்மை : | நாவு | நீவு | அவரு, இவரு | தாவு |
| | நாவுகளு | நீவுகளு | அவு, இவு, | |
| | | | அவுகளு, இவுகளு | |

**குறிப்பு** :—நாம் - நாமு - நாவு. வ - ம, போலி. இங்ஙனமே நீவு, நாவு என்பனவும். நாவுகளு = நாங்கள்.

மூவிடப்பொதுப் பெயர் = எல்லாம்.

## உ. வினாப் பெயர்

| | ஆண் | பெண் | பொது | அஃறிணை |
|---|---|---|---|---|
| ஒருமை : | யாவனு | யாவளு | யாரு, ஆரு | யாவது, யாவுது, ஏனு |
| பன்மை : | | | யாரு | யாவுவு |

## ௩. முறைப் பெயர்

| தமிழ் | கன்னடம் | தமிழ் | கன்னடம் |
|---|---|---|---|
| தாதை | தாத்த | அத்தன் | அச்ச |
| அப்பன் | அப்ப | அம்மை | அம்ம |
| ஐயன் | அய்ய | அவ்வை | அவ்வெ |
| தந்தை | தந்தெ | தாய் | தாயி |
| அண்ணன் | அண்ண | அக்கை | அக்க |
| தம்பி | தம்ம | தங்கை | தங்கி |
| மாமன் | மாவ | அத்தை | அத்தெ |
| கணவன் | கண்ட | பெண்டாட்டி | ஹெண்டதி |
| | | நல்லள் | நல்லள் (மனைவி) |
| மகன் | மக | மகள் | மகளு |
| மகவு | மக, மகு | எல்லா | எலெ |

திசைச் சொற்கள் :—முத்தப்ப அல்லது முத்தாத்த = பூட்டன் (பாட்டன் தந்தை). முத்தம்ம அல்லது முத்தஜ்ஜி = பூட்டி (பாட்டி தாய்). அஜ்ஜ = பாட்டன். அஜ்ஜி = பாட்டி, தொட்டப்ப = பெரியப்பன். தொட்டம்ம அல்லது தொட்டவ்வ = பெரியம்மை, சிக்கப்ப = சிற்றப்பன் சிக்கம்ம அல்லது சிக்கவ்வ = சிறியதாய்.

**குறிப்பு** :—முது + அப்ப = முத்தப்ப. அச்சன் - அஜ்ஜன். அச்சி - அஜ்ஜி. தொட்ட (தோடு) = பெரிய. சிக்க = சிறிய.

## ச. மக்கட் பெயர்

ஆளு, மக்களு, அரசு, தோட்டகாரனு, கும்பார (கும்பகாரன் = குயவன்), ஓலெகார (கடிதம் கொண்டு போகிறவன்) மாத்தாளி

(பேச்சாளி. மாற்றம்=சொல்), மாருளி (விற்கிறவன். மாறு=வில்), சமர்த்த, மந்தி (மாந்தர்), குண்ட்ட (முடவன்), குருட, மூட, ஊமெ, முதுக (கிழவன்), சோமாரி (சோம்பேறி), சிக்கவனு (=சிறியவன்), சண்ணவனு (சின்னவன்), ஹொசெயனு (புதியன்), எளெகவனு (இளையவன்), கரியவனு, கரியனு, நெரெயவனு (நெருங்கியவன்), பிளியவனு (வெளியவன்), ஹளெபனு (பழையன்), கள்ளனு, ஒடெய, தூத, கம்மார, காவலுகார. அர மகள், நாணிலி, அம்மண்ணி, ஆண்டி, ஒட்ட (ஒட்டன்), கன்னெ (கன்னி), குதுரெ கார, கொறவ (குறவன்), செம்பு குட்டிக (செம்பு கொட்டி), தலாரி (தலையாரி), திண்டிட்போத்த (தின்றிப்போத்து - ஆகுபெயர்).

## ௫. விலங்குப் பெயர்

ஆவு, ஆனெ (ஆனை), எத்து (எருது), ஒண்ட்டெ (ஒட்டை), கரு (கன்று), குதுர, ஆடு, குரி (கொறி=ஆடு), நரி, நாயி, கிரத்தெ (சிறுத்தை), மரி (மறி=குட்டி), ஹுலியு (புலி), கழ்தெ (கழுதை), கடசு (கிடாரி), தகரு (தகர்), மேக்கெ (மோத்தை=வெள்ளாட்டுக்கடா), கூளி, ஹோத்து (போத்து), மொலவு (முயல்). குணி மொலவு (குழி முயல்), ஹத்தி (பன்றி), பெக்கு (வெருகு), எய், எம்மை (எருமை), கடவெ (கடமை) காடி, கந்து (கன்று), குட்டி, குரங்கி.

## ௬. பறவைப் பெயர்

ஈச்சல், (ஈசல்), அந்தி (அந்து), கிளி, கிணி (கிளி), கோளி (கோழி), காகி (காக்கை), பைரி (வைரி), கூகெ (கூகை), கடல்காகி, நீருகோளி, நவில் (மயில்), பர்து (பருந்து), பாவல் (வாவல்), ஆந்தெ க (ஆந்தை), குகில் (குயில்), குளவி, கொக்கரே (கொக்கு).

## ௭. ஊர்வனவற்றின் பெயர்

அணில், உடு (உடும்பு), இறம்பு (எறும்பு), ஹாவு (பாம்பு), ஹுளு (புழு), ஹேனு (பேன்), எலி, ஹல்லி (பல்லி), அரணெ, ஹசுரு ஒதி (பச்சோந்தி), கெத்தல் (சிதல்), ஒதி (=ஓந்தி), உடுத்தெ (உறுத்தை=அணில்), கீர (கீரி), சுண்டிலி, தேள்.

## ௮. நீர்வாழ்வனவற்றின் பெயர்

மீனு, ஏடி>எண்ட்ரி (நண்டு), அட்டெ (அட்டை), ஆம (ஆமை), சொற (சுறு), தவள (தவளை).

## ௯. மரஞ் செடிப் பெயர்

மரவு (மரம்), மாவு (மா), ராகி (இராகி), களெ (களை), ஹுல்லு

(புல்), பிளி (விளை), பாளி (வாழை), தெங்கு, கோதி (கோதுமை), சணபு (சணல்), சாமெ (சாமை), பாதாமி (வாதுமை), தாளிம்பா (மாதுளை), அவரெ (அவரை), பிதிர் (வெதிர்), பேவு (வேம்பு), கீரெ (கீரை), ஆட்சோகெ (ஆடா தோடை), அகசெ (அகத்தி), ஆல (ஆல்), அரசு, அத்தி, இப்பெ (இலுப்பை), ஹூளி (புளி), பனி (பனை), ஹூவர்சி (பூவரசு), பாகெ (வாகை), பேல் (வேல்), கரி மருது, பிளிமத்தி (வெள்ளை மருது), தேகு (தேக்கு), நுக்கெ (முருங்கை), எலச்சி (இலந்தை), கடம்ப (கடம்பை), சப்பாத்திகள்ளி, முள்ளு கள்ளி, மாகாளி, நாவள்ளி, நெல்லி, நொச்சி, ஹொங்கெ (புங்கை), சம்பகி (சண்பகம்), துளசி, சீத்தா, பெண்டெ (வெண்டை), அடிகே (அடைக்காய்=பாக்கு), காடு மல்லிகெ (காட்டு மல்லிகை), கொன்னெ (கொன்றை), ஆனெய நெக்குலு (ஆனை நெருஞ்சி, அடும்பு (அடம்பு), கரி (அறுகு), ஆதலு (ஆதளை), ஆபல் (ஆம்பல்), ஆரெ (ஆர்), ஈருள்ளி, உத்து (உழுந்து), இலிமிஞ்சி (எலுமிச்சை), எள், கப்பு (கரும்பு), கள்வெ (களவு=களா), கொத்துமரி (கொத்துமல்லி), கிட (செடி), கெம்பவரெ (செவ்வவரை), கெம்பாவல் (செவ்வாம்பல்), கெம்புபாளெ (செவ்வாழை), ஜோள (சோளம்), தக்காளி, தக்கோல (தக்கோலம்), தாழெ (தாழை), தும்பெ (தும்பை), தொண்டெ (தொண்டை), கெம்பத்தி (செம்பருத்தி).

## கO. கருவிப் பெயர்

ஒரகல் (உரைகல்), ஒலக்கெ (உலக்கை), உளி, எரு (ஏர்), கம்பி, கவணெ (கவண்), கிட்டி கொழல் (குழல்), கூனி (கூனை), கொக்கெ (கொக்கி), கோல், சட்டுக (சட்டுவம்), சாட்டி (சாட்டை), சீப்பு செக்கு, செண்டு (பந்து), தடி, தப்பட்டெ (தப்பட்டை), தப்பள (தப்பணம்), தப்பெ (தப்பை), தவட்டெ (தவண்டை), தாவு (தாம்பு), தாப்பாலு (தாழ்ப்பாள்), தாழ், தித்தி, திருகாணி, துடுப்பு, தொறடு (துறடு). அர(அரம்), அம்பு, இக்கள(இடுக்கி), சிமட்டி (சிமிட்டி), பலெ (வலை), ஐல்லடி (சல்லடை), கோடலி (கோடரி), பள்ள (வள்ளம்), ஒரல் (உரல்), நேகில் (நாஞ்சில்), கத்தி, ஹலிவெ (பல்லி), ஈட்டி, அகப்பெ (அகப்பை), ஆபு(ஆப்பு).

## கக. ஐம்பூதப் பெயர்

நெல (நிலம்) நீரு, பொனல் (புனல்), காவி (கால்=காற்று,) தீ, ஆகாச (காயம்).

கஉ. கனிய (உலோக)ப் பெயர்

பெள்ளி (வெள்ளி), ஹித்தாளி (பித்தளை), உர்க்கு (உருக்கு), செம்பு, தகர (தகரம்).

கங. ஊர்திப் பெயர்

அம்பி, ஒட (ஓடம்), நாவெ (நாவாய்), ஹடகு (படகு), தேரு, அம்பாரி, தெப்ப (தெப்பம்), தேர்.

கச உணவுப் பெயர்

அப்ப (அப்பம்), அப்பள (அப்பளம்), ஹாலு (பால்), உப்பு, மர்து (மருந்து), பிர்து (விருந்து), அக்கி (அரிசி), பெண்ணெ (வெண்ணெய்), எளநீரு(இளநீர்), ஊட்ட (ஊட்டம்); அக்கி (அக்கம்=தானியம்), அவல், அள (அளை=தயிர்), இட்டலி, எரெ (இரை), உண்ணி (உண்டி), ஊட்ட (ஊட்டு), எண்ணெ (எண்ணெய்), கஞ்சி, கள், கறி, கூழ், தவுடு, திண்டி (தின்றி), தீனி.

கரு. ஆடையணிப் பெயர்

உடுபு (உடுப்பு), தேகா (தெழ்கு), தாலி, மணி, அட்டிகெ (அட்டிகை), இண்டெ (இண்டை), உடெ (உடை), கழல், குச்சு, கொப்பு, சட்டெ (சட்டை), சேல (சேலை), சுட்டி, செர்ப்பு (செருப்பு), தண்டெ (தண்டை), தலகுட்டெ (தலைக்குட்டை).

கசு. தட்டுமுட்டுப் பெயர்

பெட்டகெ (பெட்டகம்), மேஜு (மேசை), பட்லு (வட்டில்), தொட்டிலு, கூடெ (கூடை), செம்பு, அடப்ப (அடைப்பம்), உறி, கல (கலம்), குட (குடம்), குப்பி, சட்டி, ஜாடி (சாடி), ஜோளிகெ (சோளிகை), தட்டெ(தட்டம்), தடிக்கெ(தடுக்கை), தபலே (தவலை), தளிகெ (தளிகை), தொட்டி.

கள. இடப் பெயர்

இடெ (இடம்), இடுக்கு (இடுக்கு), ஊட்டெ (ஊற்று), ஹொல (புலம்), அடவி, தோப்பு, தோட்ட, மூலெ (மூலை), பாகிலு (வாசல்), குணி (குழி), கடல், பெட்ட (பொற்றை=மலை), அறெ (அறை), கேரி (சேரி), மலெ (மலை), பிந்தில் (இல்லின் பின்னிடம்), கழனி, புத்து (புற்று), மனெ (மனை), கோடெ (கோட்டை=மதில்) ஊரு, அரமனெ, பட்டண (பட்டினம்), ஹள்ளி (பள்ளி), படக (வடக்கு), தெங்க (தெற்கு), குடிசலு (குடிசை), குடி, செரெமனெ (சிறைமனை), அங்காடி, சீமெ (சீமை), பேட்டெ (பேட்டை), ஹள்ள (பள்ளம்),

கட்டட, கடெ (கடை), காடு, பேலி (வேலி), அடவி, ஒலெ (உலை =சூளை), கூடாரம், ஆகெ (அகம்), அகழ் (அகழி), அண்டெ (அண்டை), அணெ (அணை), அம்பல (அம்பலம்), அருகு, உக்கட (உக்களம்), உம்பளி (உம்பளம்) எல்லெ (எல்லை), குட்ட (குன்றம்), கேணி, கொட்டகெ (கொட்டகை), கொட்டார (கொட்டாரம்) கொத்தள (கொத்தளம்), கொனெ (கொனை), கோட்ட (கோட்டை), சில்லி, சுடுகாடு, தொணெ (சுனை), திட்டி, திட்டு, தொள (துளை); ஏரி, ஒட்டெ (ஒட்டை), ஓரம், கரெ (கரை), கள (களம்), கன்ன (கன்னம்), கா, காணி, குழி, கொள (குளம்).

கஅ. காலப் பெயர்

சமய, ஹகலு (பகல்), சாயங்கால், ராத்ரி (இராத்திரி,) இருள் (இரவு), திங்களு (=மாதம்), வார, ஹொத்து (பொழுது), வேளி (வேளை), பிடுவு (விடுவு=ஓய்வு), கடு (=தவணை), கோடெ (கோடை),

கக. சினைப் பெயர்

அடி, எலுபு (எலும்பு), மூகு (மூக்கு), ரத்த (அரத்தம்), எலெ (இலை), தலெ(தலை), முள்ளு, தொகலு (தோல்), பலெவு(பழம்), பாயி (வாய்), தொடெ (தொடை), நடு (=இடை), கண்ணு (கண்), ஹல்லு (பல்), ரெக்கெ (இறக்கை), கொம்பெ (=கிளை), ஹூவு (பூ), கொப்பு (கொழுப்பு), பாலவு (வால்), பேரு (வேர்), அலர், காலு, கெய் (கை), நொசல் (நுதல்), மொலெ (முலை), பெரல் (விரல்), பெங் (வெங்>வெரிங்=முதுகு), அணல் (=தாடி), சோகெ (தோகை), துதி (=நுதி), நெத்தர் (நெய்த்தோர்=இரத்தம்), முக (முகம்), ஓல (ஓலை), மனசு (மனம்), கிவி (செவி), பக்கெ (பக்கம்=விலா), கொம்பு, கதிர், அம்மி(அம்மம்), எசள் (இதழ்), இமெ(இமை), எறகெ (இறகு), ஈர், உகுர் (உகிர்), உச்சி, 'ஒதடு (உதடு),' உம்மி (உமி), எஞ்சல் (எச்சில்), ஓடு, கவல் (கவை), கத்து (கழுத்து), கன்ன (கன்னம்), காவு (காம்பு), காய், கால், குண்டெ (குண்டி), குதி, கொலெ (குலை), கொளக (குளம்பு), கூதல்(கூந்தல்), கொட்டெ (கொட்டை), கொண்டெ (கொண்டை), கொத்து, கொம்பு, கெம்பரி (செவ்வரி), தவடெ (தவடை), தாடி, தாறு.

உ௦. பண்புப் பெயர்

குண, எத்தரவு (ஏத்தம்), தாள்மி (பொறுமை), அகங்கார, பல (வலம்), செம்பு (செம்பு=சிவப்பு), ஆழ, பிளிப்பு (வெளுப்பு), கர்ப்பு (கருப்பு), செச்சனவு (செக்கெனவு), அகல, மட்டு, ஹாடு (பாழு), ஹசிவு (பசி), அக்கறெ (அக்கறை), அகத்ய (அகத்தியம்), அசடு, அற

(அறம்), ஆழாக்கு, இக்கட்டு, இன்(இனிமை), ஈர (ஈரம்), ஒடமெ (உடமை), உருப்பு, ஒகர் (உவர்), உழ்கெ (உழுவல்), உறுபு (உறுதி), ஊமெ (ஊமை), எத்து (எடை), எதிர், ஹேராள (ஏராளம்), ஒண்ட்டி (ஒண்டி), ஒப்பாரி, ஒய்யார, களவள (கலவரம்), காதல், கார், கார (காரம்), காவி, ஹுளி (புளி), கஹி (கசப்பு), செம்ப (=சிவப்பு), மொள (முழம்), அகல (அகலம்), நீலி (நீலம்), நாண் (நாணம்), பல்மெ (வல்லமை), கட்டி (கெட்டி), கொஞ்ச (கொஞ்சம்), கோல (கோலம்), சப்படி (சப்பட்டை), சப்பெ (சப்பை,) சேண் (சாண்), சிட்டு, சுட்டி, த்சவி (சுவை), சுள் (=உறைப்பு), சுறுக்கு (விரைவு), சேரு (=8 பலம்), சொக்கு, சொத்த (சொத்தை), சொந்த (சொந்தம்), தட்டெ (தட்டை), தடய (தடியம்=2 வீசை), தப்பித (தப்பிதம்), தப்பு, தளுக்கு, திட்ட (திட்டம்), துடுக்கு.

## உஉ. எண்ணுப் பெயர்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஒந்து | 11 | ஹன்னொந்து | 21 | இப்பத்தொந்து | 200 | இன்னூறு |
| 2 | எரடு | 12 | ஹன்னெரடு | 30 | மூவத்து | 300 | முன்னூறு |
| 3 | மூரு | 13 | ஹதிமூரு | 40 | நால்வத்து | 400 | நானூறு |
| 4 | நால்கு | 14 | ஹதிநால்கு | 50 | ஐவத்து | 500 | ஐநூறு |
| 5 | ஐது | 15 | ஹதினைது | 60 | அரவத்து | 600 | ஆறுநூறு |
| 6 | ஆரு | 16 | ஹதினாரு | 70 | எப்பத்து | 700 | எளுநூறு |
| 7 | எளு | 17 | ஹதினேளு | 80 | எம்பத்து | 800 | எண்ட்டு [நூறு |
| 8 | எண்ட்டு | 18 | ஹதினெண்ட்டு | 90 | தொம்பத்து | 900 | ஒம்பை [நூறு |
| 9 | ஒம்பத்து | 19 | ஹத்தொம்பத்து | 100 | நூறு | 1000 | சாவிர |
| 10 | ஹத்து | 20 | இப்பத்து | 101 | நூரு ஒந்து | 10001 | சாவிர [தொந்து |

| | | | |
|---|---|---|---|
| 2000 | எரடு சாவிர | 10,00,000 | ஹத்து லக்ஷ |
| 10,000 | ஹத்து சாவிர | 1,00,00,000 | கோட்டி |
| 1,00,000 | லக்ஷ | | |

### கீழிலக்கம்

| | | | |
|---|---|---|---|
| $\frac{1}{16}$ | வீசெ | $\frac{1}{2}$ | அரெ |
| $\frac{1}{8}$ | அரெகாலு | $\frac{3}{4}$ | முக்காலு |
| $\frac{1}{4}$ | காலு | ($1\frac{1}{2}$ | ஒந்தூவரெ) |

### எண்ணடி உயர்திணைப் பெயர்

ஒப்பனு (ஒருவன்), ஒப்பளு (பெ. பா.), ஒப்பரு (ஒருவர்), இப்

பரு (இருவர்), மூவரு, நால்வரு, ஐவரு, நால்குமந்தி (நான் மாந்தர்), கெலவரு (சிலர்), ஹலவரு (பலர்).

## உ௩. நோய்ப் பெயர்

ஹுண்ணு (புண்), பனி, சுளுக்கு, குரு, துறி, (சொறி).

## உ௪. உறுப்பறைப் பெயர்

குருடி (குருடு), கூன், கிவிடு (செவிடு).

## உ௪. பல்பொருட் பெயர்

உண்டெ (உண்டை), அஞ்செ (அஞ்சல்=தபால்), அடயாள (அடையாளம்), மஞ்சு, மண்ணு, உசுரு (உயிர்ப்பு=சுவாசம்), சவ (சவம்), நூலு, துண்டு, ஹொகெ (புகை), ஹெசரு (பெயர்), தூளி (தூளி), கோலு (கோல்), பூதி (புழுதி), குருது (குறி), காணிக்கெ (காணிக்கை), கம்ப (கம்பம்), தெரெ (திரை), கொண்டி, ஹலிகெ (பலகை), நொரெ (நுரை), மஞ்சு, உய்யல் (ஊசல்), சொடர் (சுடர்) சுத்தம் (சுற்றம்), சேல (சாளி), புடி (பொடி), பாடிகெ (வாடகை), ஹொரெ, (பொறை), கத (கதவு), மிஞ்ச்சு (மின்னல்), ஒடம்படிக்கெ, மரளு (மணல்), கடியார, சம்பள, மழெ, கல்லு, ஹணவு(பணம்), கும்-, துட்டு, ஒடவெ (உடமை), அட்டி, கூடு, சரக்கு, பிளக்கு, (விளக்கு), காசு, கொள்ளி, துண்டு, ஹருகு (பலுகு), பளெ (வளை), வாடிக்கெ (வாடிக்கை), கூடு, அச்சு, அலெ (அலை), ஆலி (ஆலங்கட்டி), ஆவி, ஒடம்பி (உடம்பு), ஒடல் (உடல்), உசிர் (உயிர்), உருளி, இருள், எருபு (எரு); இடரு, எகுமதி (ஏற்றுமதி), ஒள (ஒளி), ஓலக (ஓலக்கம்), கட்டெ கட்டி), கடவள் (கடவுள்), கதவு, கருடி (கரடி=சிலம்பம்), கரி, கழு, காப்பு ,காரெ (காரை=சாந்து). குடிக்கெ (குடுக்கை), குண்ட (குண்டு), குத்திகெ (குத்தகை), குப்பெ (குப்பை), கொரல் (குரல்), கூடு, கூலி, கூறு, கொள்ளி, கோழெ (கோழை), சட்ட (சட்டம்), சிட்டிகெ (சிட்டிக்கை), சில்லறெ (சில்லறை), சிள்ளு (சீழ்க்கை), சீட்டி (சீட்டு), சுட்டி (சுருட்டு), கேர் (சுவர்), சூடு (அரிக்கட்டுக் குவியல்)சூல், சூருள் (சூள்), செத்தெ (செத்தை), கெரம்பாகு (செவ்வாக்கு), தொட்டு (சொட்டு), ஜொண்டு (சொண்டு), நேசறு (ஞாயிறு), தக்கு, தகடு, தத்து, தணல், தளெ (தளை), தெரளெ (திரளை), தெரெ (திரை), தீவட்டி, துண்டு, தூசு, தூம்பு, ஹெண்ணு (பெண்).

## உ௫. தொழிற்பெயர்

(1) முதனிலைத் தொழிற்பெயர்.

எ - டு : கள், ஹகெ, தப்பு.

(2) முதனிலை திரிந்த தொழிற்பெயர்.
எ - டு : கேடு, ஈடு.

(3) முதனிலை திரிந்து விகுதிபெற்ற தொழிற்பெயர்.
எ - டு . தாஹ (தாகம்).

(4) முதனிலை வலி யிரட்டித்த தொழிற்பெயர்.
எ - டு : ஊட்டெ (ஊற்று, ஆகுபெயர்)

(5) முதனிலை திரிந்து வலி யிரட்டித்த தொழிற்பெயர்.
எ - டு : குதி—கூத்து.

(6) முதனிலை வலி யிரட்டித்து விகுதிபெற்ற தொழிற்பெயர்.
எ - டு : ஆட்ட (ஆட்டம்).

(7) விகுதிபெற்ற தொழிற்பெயர்.

| எ - டு : விகுதி | | பெயர் |
|---|---|---|
| கெ | (கை) | அடிகெ (அடுகை = சமைத்தல்) |
| தெ | (தை) | நடத்தெ (நடத்தை) |
| ஊ | (உள்) | பெளெயு (விளையுள்) |
| அலு | (அல்) | பிக்கலு (விக்கல்) |
| வு | (உ) | அடவு (அடைவு), சாவு, |
| | பு | அதிர்ப்பு |
| அண | (அணம்) | கட்டண (கட்டணம்) |
| பி | (வி) | கல்பி (கல்வி) |

(8) முதனிலை வலித்து விகுதிபெற்ற தொழிற்பெயர்
எ - டு : பழக்கெ (வழக்கம்), அடக்க (அடக்கம்).

(9) பகுதி வழக்கற்ற தொழிற்பெயர்.
எ - டு : கட்டளெ.

## சில தொழிற்பெயர்கள்

ஒணகிலு (உணக்கம்), ஔவு (உளவு), ஏலாம் (ஏலம்), ஒட்ட (ஒட்டம்), ஒப்பிடி (ஒப்படி = அறுவடை), ஒப்பந்த, ஒப்ப (ஒப்பம்), ஒக்கரி (ஒக்காளம்), ஜூது (சூது). தப்படி (தவறு), தாட்டவாட்ட (தாட்டோட்டம்), தீர்ப்பு, தீர்மான (தீர்மானம்), அம்மாலெ (அம்மானை).

## வினையாலணையும் பெயர்

நோடிதவனு (= பார்த்தவன்), நோடுவவனு (= பார்க்கிறவன், பார்ப்பவன்) முதலியன.

### வேற்றுமைப் பெயர்

| | நான் | மரம் | குதிரை | அரசு |
|---|---|---|---|---|
| 1. | நானு | மரவு | குதரெயு | அரசு |
| 2. | நன்னன்னு | மரவன்னு | குதிரெயன்னு | அரசன்னு |
| 3. | நன்னிந்த | மரதிந்த | குதுரெயிந்த | அரசினிந்த |
| 4. | நனகெ | மரக்கெ | குதுரெகெ | அரசிகெ |
| 5. | நன்னிந்த | மரதிந்த | குதுரெயிந்த | ஆரசினிந்த |
| 6. | நன்ன | மரத | குதுரெய | அரசின |
| 7. | நன்னல்லி | மரதல்லி | குதுரெயல்லி | அரசினல்லி |
| 8. | | மரவே | குதுரெயே | அரசே |

## முக்கிய வினைகள்

அகல், அகழ், அசர் (அயர்), அஞ்சு, அடி, அடு (சமை), அடெ (அடை), அண்டிசு (அண்டு), அண்ணெ (அண்ணு), அணுங்கு (அணங்கு), அணெ (அணே), அதட்டு, அதிர், அப்பு, அப்பளிசு (அப் பளி), அமர், அரள், அரெ (அரை), அல்லாடு, அலம்பு, அல (அலு), அலர், அலெ (அலே), அழி, அழு, அள, அறி, அறெ (அறை), ஆகு, ஆடு, ஆயு (ஆய்), ஆர் (=ஒலி), ஆராயு, ஆரு (ஆர்=நிறை), ஆளு, ஆறு, ஆனு, இடறு, இடி, இடிகு (இடுக்கு), இடு, இரு, இழ் (இழு), இழி (=இறங்கு), இழகு (இழுக்கு), இறுகு, ஈ, ஈஜு (நீந்து), ஈழ் (ஈர்), ஈன், உகு, உசிர் (உயிர்), உடு, உண்ணு, உதிர், உப்பு, உய், உரி (எரி), உரிசு (உரி), உருள், உலி, (ஒலி), உழு, உளி (ஒளி), உளுக்கு, உறி (உறிஞ்சு), உறு, ஊது, எக்கு, எசெ (எறி), எட்டு, எணிசு (எண்), எத்து (எடு), எதிரிசு (எதிர்), எரெ (இர), எழு, எறகு (இறங்கு), எறச்சு (இறை), எய் (எய்), என், ஏறு, ஒசர் (சுர), ஒட்டு, ஒடி, ஒடெ (உடை), ஒணகு (உணங்கு), ஒணர் (உணர்), ஒத்து (ஒற்று), ஒதவு (உதவு), ஒதறு (உதறு), ஒதுங்கு, ஒடெ (உதை), ஒப்பு, ஒரெ (உருவு), ஒரெ (உரை=தேய்), ஒரெ (உரை=சொல்), ஒழ்கு (ஒழுகு), ஒறங்கு (உறங்கு), ஒடு, ஒது, ஒயு, ஒவு (ஓம்பு).

கக்கு, கட்டு, கடி, கடெ (கடை), கசி, கத்தரிசு (கத்தரி), கத்து, காகு (கரை=தேய்) கரெ (கரை=அழை), கல், கலங்கு, கலசு (கல), கவர், கவலு, கவி, கழல், கழி, கழுஹு (கடவு) கள், களெ (களே), கற, கனல், கா, காண், காய், கிட்டு, கீளு (கிள்), கீறு, குட்டு, குடி, குத்து, குதி, குதுரு (குதிர்), குந்து (குன்று), குளிர், குறி, குனி, கூகு (கூவு), கூடு, கெடு, கெதறு (சிதறு), கெய் (செய்) கொரண்டு (சுரண்டு), கெலு (கெலி), கெளர் (கிளறு), கேளு, கை, கொடு

கொக்கரிசு (கொக்கரி), கொத்து, கொயு, கொல், கொழெ (குழை) கொள், கொளெ (குலை), கொறெ (குறை), கொறுக்கு (கொறி), கோ, சல் (செல்), சவி (சவை), சளி (சலி), சாயு (சா), சார், சாலு, சாறு (சாற்று), சிக்கு, சிமுட்டு (சிமிட்டு), சீறு, சுடு, சுட்டு, சுண்டு, சுத்து (சுற்று), சுர்கு (சுருங்கு), சுரி(=சொரி), சுருள், சுழி, செர்கு (செருகு), சேர், சொல், சோர், சோலு (தோல்), தகு, தங்கு, தட்டு, தடெ (தடு), தத்தளிசு, தணி, தப்பு, தரு (தா), தவழ், தழு (தழுவு), தள, தளர், தளிரு, தறி, தாகு (தாக்கு), தாண்டு, தாளிசு (தாளி), தாழ், தாளு, திந்து (திருந்து), திட்டு, திரி, திருகு (திரும்பு), தின்னு, திளி(தெளி), தீர், துறிசு (சொறி), துடி, துண்டிசு (துண்டி), துள்ளு, தூகு (தூங்கு), தூறு, தெகு (தெவு), தெறெ (திற), தெரு (தீர்), தே (தேய்), தொங்கு, தேகட்டு (தெவிட்டு), தொடர், தொடங்கு, தொடெ (துடை), தொலகு (துலங்கு), தொழசு (துழவு), தோயு, தொறெ (துற), தோறு (தோன்று), நகு, நடு, நடுகு (நடுங்கு), நடெ (நட), நம்பு, நரெ (நரை), நரக்கு (நறுக்கு), நாட்டு, நாறு, நிமிர், நில்லு, நீகு (நீங்கு), நூலு, நெகழ் (நிகழ்), நெய், நேல் (நால்), நெனெ (நினை), நோ, நோடு, நோனு (நோல்), பகெ (பகை), பசி, படு, படெ (படை), பத்து (பற்று), பய் (வை=திட்டு), பரு (வா), பரெ (வரை), பழி, பளெ (வளை), பளி (வழி), பளகு (வழங்கு), பறி, பாடு (வாடு), பாய், பிக்கு (விக்கு), பிசுடு (விசிறு), பிடி, பிடு (விடு), பித்து (வித்து), பிதிரு (விதிர்), பிந்து, பிரி (விரி), பில் (வில்), பிழி, பீகு (வீங்கு), பீசு, (வீசு), பீழு (வீழ்), புரி (பொரி), புழ்கு (புழுங்கு), பூசு, பூண், பெயரு (வெயர்), பெரெ (விறை), பெள்கு (வெள்கு), பெளகு (விளங்கு), பெளர் (வளர்), பெளெ (விளை), பொர்சு (பெருரு), பெறு, பேடு (வேண்டு), பே (வே=வேகு), பொகழ் (புகழ்), பொணர் (புணர்), பொண்மு (பொருமு), பொதிசு (பொதி) பொரள் (புரள்), பொருது (பொருந்து), பொறு, மக்கு (மங்கு), மடலு (படர்), மடி, மருன், மறெ (மற), மலெ (மலை), மாறு, மாய், மிகு, மிஞ்சு, மீறு, முக்கு (மொக்கு), முகி (முடி), முங்கு (விழுங்கு), முச்சு (மூடு), முட்டு, முடுகு, முணுகு (முழுகு), முரி, மூசு (மொ), மூது (மூ), மெச்சு, மெத்து, மேயு, மோது, மொள (முளை), வாழ், வீ, ஹதுகு (பதுங்கு), ஹலும்பு (புலம்பு), ஹாடு (பாடு), ஹாயு (பாய்), ஹாறு (பாறு), ஹிடி (பிடி), ஹா⁻துக்கு (பிதுக்கு), ஹெணகு (பிணங்கு), ஹெறு (பெறு), ஹேலு (பேல்), ஹேளு (கிள), ஹொகு (புகு), ஹொடி (அடி), ஹொயு (பெய்), ஹொரு (பொறு), ஹொளி (பொலி) ,ஹொறடு (புறப்படு), ஹோகு (போகு); ஹோல் (போல்).

### வினைப்புடை பெயர்ச்சி

### கரெ (கரை=அழை) என்னும் வினை

| முற்று : | | இ.கா. | நி. கா. | எ. கா. |
|---|---|---|---|---|
| தன்மை : | ஒ. | கரெதெனு | கரெயுத்தேனெ | கரெயுவெனு |
| | ப. | கரெதெவு | கரெயுத்தேவெ | கரெயுவெவு |
| முன்னிலை : | ஒ. | கரெதி | கரெயுத்தீ | கரெயுவி |
| | ப. | கரெதிரி | கரெயுத்தீரி | கரெயுவிரி |
| படர்க்கை : | | | | |
| | ஆண் | கரெதனு | கரெயுத்தானெ | கரெயுவனு |
| | பெண் | கரெதளு | கரெயுத்தாளெ | கரெயுவளு |
| | பலர் | கரெதரு | கரெயுத்தாரெ | கரெயுவரு |
| | ஒ. | கரெயித்து | கரெயுத்ததெ | கரெயுவுது |
| | ப. | கரெதவு | கரெயுத்தாவெ | கரெயுவவு |
| ஏவல் : | ஒ. | கரெ | ப. கரெயிரி | |

| | பெயரெச்சம் | வினையெச்சம் |
|---|---|---|
| இ. கா. | கரெத | கரெது |
| நி. கா. | கரெயுவ | கரயெ |
| எ. கா. | ,, | கரெதரெ |
| எதிர்மறை : | கரெயத | கரெயதெ |

தொடர்ச்சி வினையெச்சம் : கரெயுத்தா
செயப்பாட்டு வினை : கரெயல்படு
பிறவினை : கரெயிசு

### கலவைக்கால வினை

| | | | |
|---|---|---|---|
| கரெது | இத்தெனு | = | கரைந்திருந்தேன் |
| ,, | இருத்தேனெ | = | ,, க்கிறேன் |
| ,, | இருவெனு | = | ,, ப்பேன் |
| கரெயுத்தா | இத்தெனு | = | கரைந்துகொண்டிருந்தேன் |
| ,, | இருத்தேனெ | = | ,, க்கிறேன் |
| ,, | இருவெனு | = | ,, ப்டேன் |

### எதிர்மறை வினை

| (1) பாலிடச்சிறப்பு : | | ஒருமை | பன்மை | |
|---|---|---|---|---|
| தன்மை : | | கரெயெனு | கரெயெவு | நி. கா. |
| முன்னிலை : | | கரெயெ | கரெயரி | எ. கா. |
| படர்க்கை : | ஆ. | கரெயனு | கரெயரு | இரண்டிற்கும் |
| | பெ. | கரெயளு | | |
| | ஒ. | கரெயது | கரெயவு | பொது. |

(2) பாலிடப் பொது:

இ. கா. கரெயலில்ல=நி. கா. வி. எ. + இல்ல.
கரெதுதில்ல=இ. கா. தொ. பொ. + இல்ல.
கரெதில்ல=இ. கா. வி. எ. + இல்ல.
நி. கா. } கரெயுவுதில்ல=எ. கா. தொ. பெ. + இல்ல.
எ. கா, } கரெயலிக்கில்ல=4-ம் வே. தொ. பெ. + இல்ல.

### துணைவினைகள்

அல்ல: இதுமரவல்ல=இதுமரமல்ல.

ஆகு: அரசனுகி, கட்டியாகி; தானுகி ஹோயித்து = தானுகப் போயிற்று, நோடுவதக்காகி=பார்ப்பதற்காக, ஊட்டவாயித்து = உணவாயிற்று, நன்னிந்தாகுவதில்ல=என்னாலாகுவதில்லை, பரெயலாயித்து=வரையலாயிற்று, (வரையப்பட்டது).

ஆடு: மாத்தாடு=மாற்றமாடு (உரையாடு).

ஆறு (ஆற்று): ஆறெனு=ஆற்றேன். (என்னால் முடியாது).

இல்ல: பரலில்ல=வரவில்லை (வரவில்லை), இல்ல (No).

இரு: நோடியிரு=பார்த்திரு, மரவிருத்தமெதெ=மாமிருக்கின்றது.

உண்டு: நகெகெ ஹொலவுண்டு=எனக்குப் புலம் (நிலம்) உண்டு.

ஒல்: ஒல்லெனு=ஒல்லேன் (இசையேன்).

கூடு: கூடது=கூடாது (தகாது).

கொள்: நிந்துகொள்=நின்றுகொள்.

தகு: பரத்தக்குது=வரத்தக்கது.

பல்: பல்லெனு=வல்லேன் (என்னால் முடியும்).

பேக்கு: கொடபேக்கு=கொடுக்க வேண்டும்.

பேடு: தின்னபேடு=தின்னவேண்டும்.

பேட: தின்னபேட=தின்னவேண்டாம்.

ஹோகு: ஒடெது ஹோயித்து=உடைந்து போயிற்று.

சிக்கதெ ஹோதரு=சிக்காது (அகப்படாமல்) போயினர்.

### புணர்வினை

**பெயரொடுவினை.** கைக்கொள்ளு, சாப்பாடு (காப்பாற்று) மாத்தாடு, ஈடேறு, நெறவேறு, எதுருகொள்ளு, மேல்படு, புரயேறு, செண்டாடுசு முதலியன.

**வினையொடுவினை:** ஆகிரு (= ஆகியிரு), உண்டாகு, கொண்டாடு, இல்லாதே ஹோகு, பிட்டுபிடு ஓடி, ஹோகு, தெளுகொள், ஒப்பிக் கொள், கொண்டுபரு (கொண்டுவா), கொண்டு கொள்ளு (வாங்கு), பீசாடு (வீசாட்டு), முதலியன.

**குறிப்புப் பெயரெச்சம்.**

கெல (சில), ஹல (பல), கொஞ்ச, எல்லா, சன்ன (சின்ன), தொட்ட (=பெரிய), எளய (இளைய), ஹளெ (பழ=பழைய), ஹொச (புது),.

**குறிப்பு வினையெச்சம்.**

தண்ணகெ (தட்பமாய்), நெட்டனெ, பக்கென (பொக்கென), பேகனெ (வேகமாய்), மெல்லனெ, முதலியன.

## இடைச்சொல்

**சுட்டடிச் சொற்கள்.**

ஆ, அகோ, அதோ, ஆக=அன்று, ஹாகெ (=அப்படி), அந்து (அன்று), அந்த்த (=அனைய), அந்த்து (=அப்படி).

**வினுவடிச் சொற்கள்.**

ஏ, ஏகெ (ஏன்), ஏன், எந்த்த (=எனைய), எந்த்து (=எப்படி)ஒ.

**குறிப்புச் சொற்கள்.**

அய்யோ (ஐயோ), ஓய்யோ, மொர்ரோ (முறையோ), சீ, அம்மம்ம, ஜலஜல (சலசல), சும்மனெ, சுரீரென, சுறுசுறென, தளதள.

**தொடர்புச் சொற்கள்.**

குறித்து, ஒளகெ (உள்ளே), கெளகெ (கீழே), முந்தெ, ஹிந்தெ (பின்பு), ஹொரத்தெ (புறத்தே), எதுரு (எதிர்), மேலெ, மேகெ, கூட, நடுவெ, பெளிகெ (வெளுக்க), முஞ்ச்செ (முந்தே), சுத்தலு (சுற்றிலும்), மொதலு, உள், கீழ், முந்தெ (முன்பு), ஹிந்தெ (=பின்பு), ஹொறகெ (புறகே).

**காலம்பற்றிய சொற்கள்.**

இன்னு (இன்று), மொன்னெ (மூன்றும்நாள்), நின்னெ (நெருநல்), நாளெ (நாளை), நாளித்து (நாளைநின்று), ஒடனெ (உடனே).

**அளவுபற்றிய சொற்கள்.**

மட்டிகெ (மட்டுக்கு), வரெ, வரிகூ (வரைக்கு), இன்னு (இன்னும்), மத்து (மற்று), பேரெ (வேறே), கூட.

**இணைப்புச் சொற்கள்.**

ஆதரெ (ஆனுல்), ஆகலி (ஆகல்=அல்லது), ஆதாரு (ஆனுலும்), ஆதுதரிந்த (ஆதலினுலே), உம், அல்லதெ (அல்லாதே), இல்லதெ.

**விளிபற்றிய சொற்கள்.** ஓயி, ஒ, எலே.

பால்காட்டும் விகுதிகள்.

ஆ. பா : *அன்>அனெ, அனு, அ, காரன்>கார>ஆர.*

பெ. பா : *அள்>அளெ, அளு.*

*இ, இதி, இத்தி, இத்தி>வித்தி<கித்தி. அனி<இனி.*

பலர் பால் ; *அர்>அரெ, அரு. கள்>களு.*

ஒ. பா : *அது<து. இது, உது.*

ப. பா ; *கள்<களு. அவை<அவெ, அவு.*

தொடர்ச்சொல்.

காடஜேனு (காட்டுத்தேன்), திக்கில்லாத, கண்ணீரு, நெலமட்ட, மொதலாத(முதலான), 'மொதலுகொண்டு......வரெகூ,' இல்லவேயில்ல, நம்பத்தக்கது, துண்டு துண்டாகி, பேரெ பேரெ (வேறே வேறே), நட்ட நடுவெ, ஆட்ட பாட்டகளு, ஒந்தொந்து (ஒவ்வொன்று), இன்னொந்து, மத்தொந்து (மற்றொன்று), பேரொந்து (வேறொன்று), ஒந்துவேளி (ஒருவேளை), நடவளிக்க (நடபடிக்கை), கண்ணூரெ, தலெகட்டு, அட்டுப்பு, எளநகெ(இளநகை), கடெஹுட்டு (கடைக்குட்டி), கும்பட்டெ (கும்புசுட்டி), சுத்தமுத்த (சுற்றுமுற்றும்), கெங்கண் (செங்கண்), கெந்தளிர் (செந்தளிர்), கெந்தாள் (செந்தாள்), மழெகால, தொடெவாழை (தொடைவாழை), நாடாடி (நாடோடி), பச்சகல்லு, பட்டசாலெ, ஹலசரக்கு, ஹள்ளத நாலெ (பள்ளநாலி), ஹள்ளததாக்கு, ஹள்ளமட (பள்ளமடை), பன்னெடெ, பன்னீர், ஹாவாடிசு (பாம்பாட்டு), ஹாழுரு, பாளெயப்பட்டு, ஹிங்கட்டு முரிகட்டு (பின்கட்டு மறிகட்டு), பீக்கலாட்ட, பெர்பசிறு (பெருவயிறு), மாலுகண் (மாறுகண்), மோடாமோடி, பிளிநரி (வெள்நரி), பச்செல, பெள்ளானெ (வெள்ளானை), பெர்படெ (பெரும்படை) பெங்கீர் (வெங்கீர்), ஹுலிதொகலு (புலித்தோல்), தாயிதந்தெகளு, அண்ண தம்மந்திரு, எந்தெந்திகூ (என்றென்றைக்கும்).

சொற்றொடர்கள்.

அது யாரு ? கள்ளரு ஓடி ஹோதரு (போனர்), கோலுமுரிது ஹோயித்து (முறிந்து போயிற்று), மனெகெ ஹோகுவ ஹொத்தாயித்து = மனைக்குப் போகிற பொழுதாயிற்று.

ஈ ஊரினல்லி நனகெ ஒந்து மனெயு இதே = இவ்வூரில் எனக்கு ஒரு மனை இருக்கிறது. ஹுடுகரு தோட்டதல்லி திருகாடுத்தா மரகளன்னு ஹத்துத்தா ஹண்ணு தின்னுத்தா ஒப்பரெனப்

பரு கூகுத்தா ஹொசான்னு ஹிடிது கரையுத்தா நகுத்தா ஆடுத்தா இத்தரு=பையன்கள் தோட்டத்தில் திரிந்துகொண்டும் மரங்களில் ஏறிக்கொண்டும் பழங்கள் தின்றுகொண்டும் ஒருவரையொருவர் கூவி (கூப்பிட்டு)க் கொண்டும் பெயரிட்டுக் கரைந்து (அழைத்துக்) கொண்டும் நகைத்துக் கொண்டும் விளையாடிக் கொண்டும் இருந்தனர். ஹுடுகர்=பொடியர் அல்லது பிடுகர்.

நீவாகலி நானாகலி ஹோகுவதில்ல=நீங்களாகல் நானாகல் போகுவதில்லை. ஆகல்=ஆவது. நீவு ஆ கதெயன்னு ஓதிதபுஸ்தவன்னு நனகெ தோறிசிரி=நீங்கள் அக் கதையை ஓதின (படித்த) பத்தகத்தை எனக்குக் காட்டுங்கள். தோறு<தோன்று. தோறிசிரி (பி. வி.)

நன்ன ஊரன்னு சேரிதகூடலெ நிமகெ ஒந்து காகதவன்னு பரெயுவெனு=என் ஊர் போய்ச் சேர்ந்தவுடன் உமக்கு ஒரு காகிதம் வரைவேன்.

மக்களெல்லரு பாடசாலெயன்னு பிட்டு, தம்ம தம்ம மனெகளிகெ ஹொறட்டு ஹோத பளிக்க ஜவானனு பாகிலுகளன்னு முச்சிபிடுவனு — மக்க (பிள்ளைக) ளெல்லாரும் பாடசாலையை விட்டுத் தம்தம் மனைகளுக்குப் புறப்பட்டுப்போன பிறகு சேவகன் வாசல்களை மூடிவிடுவான்.

நாளெவார ஊரினல்லி இருவிரோ எம்புதாகி அவரன்னு கேளு=நாளை (அடுத்த) வாரம் ஊரில் இருப்பீரோ என்பதாக அவரைக் கேள்.

மழெயு பாரதித்தரெ பெளெ யாகுவுதில்ல=மழை வாராதிருந்தால் விளை (விளையுள்) ஆகுவதில்லை.

### விதைக்கிறவன் உவமை

" இகோ, பித்துவவனு பித்த ஹொரட்டனு. அவனு பித்துவாக செலவு மார்கத ஹத்தர பித்து. பக்ஷிகளு பந்து அதன்னு திந்துபிட்டவு. பேரெ கெலவு பஹள மண்ணு இல்லத பண்டெஸ்தளகளல்லி பித்து ; அதக்கெ ஆளவாத மண்ணு இல்லத காரண, சங்கடலே மொள்யித்து ; ஆதரெ சூர்யனு மூடிதாக அது பெந்து, அதக்கெ பேரு இல்லாததரிந்த ஒணகி ஹோயித்து. பேரெ கெலவு முள்ளுகள மேலெ பித்து ; முள்ளுகளு பெளெது, அணகிசிதவு, பேரெ கெலவு ஒள்ளே பூமிய மேலெ பித்து, ஒந்து நூரஷ்டு, ஒந்து

அரவத்தஷ்டு, ஒந்து மூவத்தஷ்டு பல வகாட்டத்து. கேளுவதக்கெ கிவிகளுள்ளவனு கேளலி.” (மத்தேயு, 13 : 3—9)

### இதன் சொன்மொழி பெயர்ப்பு

இதோ, வித்துகிறவன் வித்தப் புறப்பட்டான், அவன் வித்து கையில் சில வழியருகே விழுந்து, பறவைகள் வந்து அதைத் தின்று விட்டன. வேறே சில மிகுந்த மண் இல்லாத பாறையிடங்களில் விழுந்தது. அதற்கு ஆழமான மண் இல்லாத காரணமாய் விரைந்து முளைத்தது; ஆனால் வெயில் ஏறினபோது அது வெந்து, அதற்கு வேரில்லாததால் உணங்கிப் போயிற்று. வேறே சில முட்கள் மேலே விழுந்தது. முட்கள் வளர்ந்து அதை நெருக்கி விட்டன. வேறே சில நல்ல நிலத்தில் விழுந்து ஒன்று நூறாகவும் ஒன்று அறுபதாகவும் ஒன்று முப்பதாகவும் பலன் கொடுத்தது. கேட்கிறதற்குச் செவிகளுள்ளவன் கேட்கக் கடவன்.

**குறிப்பு** :—மெய்ம்மறை (சத்திய வேதம்) என்னும் கிறித்தவ மறையின் மொழிநடை விடைத்தொண்டாராதலால், மேற்கூறிய உவமையில் அஃறிணைப் பன்மையெழுவாய்கள் ஒருமை வினையொடு முடிந்தன; பன்மைச் சொற்கு ஒருமைச்சொல் வந்தது.

---

## III. தெலுங்கு

### தெலுங்கு நாட்டெல்லை

தென்னிந்தியாவில், கிழக்கே கடற்கரை யொட்டிப் பழவேற்காட்டிலிருந்து சிக்காக்கோல் வரைக்கும், மேற்கே மராட்டிய மைசூர்ச் சீமைகளின் கீழெல்லை வரைக்கும், ‘கொடுக்கப்பட்ட கோட்டங்கள்’ (‘Ceded districts’) கர்நூல் ஐதராபாத்துச் சீமையின் பெரும்பகுதி நாகபுர நாட்டின் ஒரு பகுதி கோண்டு வனம் ஆகிய இடங்களில் பெரும்பாலும் தாய்மொழியாகப் பேசப்படுவது தெலுங்கு.

### தெலுங்குப் பெயர்

தெலுங்கிற்கு வடுகு ஆந்திரம் என்னும் பெயர்களுண்டு. தெலுங்கு என்பது தெலுங்கராலேயே இடப்பட்டது; வடுகு என்பது தமிழராலும் ஆந்திரம் என்பது ஆரியராலும் இடப்பட்டன.

தெலுங்கு தமிழ்நாட்டிற்கு வடக்கில் வழங்குவதால் வடுகு எனப்பட்டது. தெலுங்கு என்பதன் பண்டை வடிவம் திரிலிங்கம் என்பது. இது முதலாவது தெலுங்குநாட்டுப் பெயராயிருந்து பின்பு அந்நாட்டு மொழியைக் குறித்தது. ஆந்திரம் என்பதும் இங்ஙனமே. **தாலமி** என்னும் ஞாலநூலாசிரியர் 'த்ரிக்ளுப்தொன்' 'த்ரிக்ளுப்பொன்' 'Triglupton' 'Trigluphon' என ஒரு கங்கைக் கரை நாட்டையும், **பிளினி** என்னும் சரித்திராசிரியர் 'மொடொகலிங்கம்' (=மூன்று கலிங்கம்) என ஓர் இந்திய நாட்டையும் குறித்திருப்பதனாலும், ஒரு பண்டை இந்திய அரச மரபினர் "திரிகலிங்கத் தலைவர்" என்னும் பட்டத்தைச் சூடிக் கொண்டதாக ஒரு கல்வெட்டுக் கூறுவதாலும், புராணங்களிலும் ஒரு செப்புப் பட்டயத்திலும் 'திரிகலிங்கம்' என்னும் பெயர் காணப்படுவதாலும், **பிளினி** என்பவர் **கலிங்கத்தினும்** (Calingæ) வேறாக **மக்கொ-கலிங்கே** (Macco-Calingæ) கங்கரிதெசு - கலிங்கே (Gangarides-Calingæ) என இரு நாடுகளைக் குறிப்பதாலும், பாரதத்துள் கலிங்கர் மும்முறை குறிக்கப்படுவதாலும், கலிங்கம் (ஒரிசா மாகாணமும் கஞ்சங்கோட்டகமும்) என ஒரு தெலுங்கு நாடிருந்ததாலும், பண்டைத் தெலுங்கு நாட்டின் ஒரு பாகம் கலிங்கம் என்னும் பொதுப் பெயர் கொண்ட முப்பகுதியாயிருந்ததென்றும், அதனால் திரிகலிங்கம் எனப்பட்டதென்றும் அறியலாம். திரிகலிங்கம் என்பது, முறையே திரிலிங்கம் தெலுங்கம் தெலுங்கு என மருவிற்று. **தாரநாதன்** என்னும் திபேத்தச் சரித்திராசிரியர் தெலுங்கு நாட்டைத் திரிலிங்கம் என்றும், அதன் ஒரு பகுதியைக் கலிங்கம் என்றும், அதன் தலைநகர் கலிங்கபுரம் என்றும் குறித்துள்ளார். தெலுங்கு என்னும் பெயர் தெலிங்க, தைலிங்க, தெலுகு, தெனுங்கு, தெனுகு என்னும் வடிவங்களிலும் தெலுங்கர்க்குள் வழங்கி வருகின்றது. இவற்றுள் தெனுகு என்னும் வடிவத்தைச் சிறந்ததாகக்கொண்டு அதற்குத் 'தேன்போன்றது' என்னும் பொருள் கற்பிப்பது தெலுங்குப் பண்டிதர் வழக்கம்!*

* இது தென்மொழி என்னும் தமிழ்ப் பெயருக்குத் தேன்மொழி என்று தமிழ்ப் புலவருட் சிலர் பொருள் கூறுவதை ஒக்கும்.

தெலுங்கு நாட்டு வரலாறு

முதன்முதல் தெலுங்கு நாட்டைப் பற்றிக் குறிப்பாகத் தெரிவிப்பது தொல்காப்பியம்.

" வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து "

என்னும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தாலும்,

" செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி "

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் உரையாலும்,

" வடதிசை மருங்கின் வடுகு[1] வரம்பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும் "

என்னும் சிறுகாக்கை பாடினியார் கூற்றாலும்,

தொல்காப்பியர் காலத்தில் வேங்கடத்திற்கு வடக்கில் கொடுந்தமிழ் வழங்கிற்றென்றும் அது பின்பு திரிந்து வடுகு (தெலுங்கு) என்னும் கிளைமொழியாயிற்றென்றும் அறியலாம்.

கலிங்கத்திற்கு வடக்கில் ஆந்திரம்[2] என ஒரு தெலுங்கு நாடிருந்ததென்றும், ஓர் ஆந்திர அரச மரபினர் வட இந்தியாவையும் ஆண்டுவந்தனரென்றும், வடமொழி இருக்குவேத ஐத்திரேய பிராமணத்தாலும் இதிகாச புராணங்களாலும் அறியக் கிடக்கின்றது. ஆந்திரரை ஐத்திரேய பிராமணம் அநாகரிகராகக் குறிப்பிடினும் பிளினி, ஒரு வலிமை மிக்க நாட்டாராகக் கூறியுள்ளார். 'பியூட்டிங்கர் பட்டிகை' களிலும் ("Peutinger Tables") ஆந்திரர் குறிக்கப்படுகின்றனர். சேரன் செங்குட்டுவனுக்கு வடநாட்டுச் செல

1. வடுகு—வடவெல்லையிலுள்ள வடுக நாடு.

2. திரிகலிங்கத்துள் அடங்காது ஆந்திரம் என ஒரு தெலுங்கு நாடும் இருந்ததேனும், திரிகலிங்கப் பெயர் பொதுப் பெயராவதற்கு இழுக்கில்லை. ஆங்கிலர் சாக்சனியர் சூட்டர் ஆகிய மும்மரபினர் குலநாடு மொழியும் ஆங்கிலம் என்னும் பெயரால் வழங்குதல் காண்க.

வில் துணைவரான நூற்றுவர் கன்னர் ஆந்திர மன்னராயிருந்திருக்கலாம்.

ஆந்திரர் நெடுங்காலமாக ஒரு தனி மன்பதையராக இருந்து வந்திருக்கின்றனர் எனினும், அவரது மொழி கடைக்கழகக் காலம் வரையில் கொடுந்தமிழாயும் கிளைமொழியாயுமிருந்து அதன் பின்னரே வடமொழிக் கலப்பால் இன மொழியாய்ப் பிரிந்து விட்டது. கடைக் கழகக் காலத்தில் வேங்கட வெல்லையில் தெலுங்கு இருந்ததில்லை. அன்று வேங்கட மலை **புல்லி** என்னும் தமிழ வள்ளலுக்குரியதா யிருந்தது.

"புல்லிய—வேங்கட விறல் வரைப்பட்ட"

(புறம். 385.)

"கடுமான் **புல்லிய** காடிறந் தோரே"

தொண்டை மண்டலத்து வேங்கடக் கோட்டத்தைச் சார்ந்ததும் காளத்தியைச் சூழ்ந்ததுமான பொத்தப்பி நாடு கண்ணப்ப நாயனார் திருநாடாகும்.

"கண்ணப்பர் திருநாடென்பர்.........பொத்தப்பி நாடு"

(பெரிய. கண். 1)

வேங்கடமலை தொண்டைநாட்டுப் பல்குன்றக்கோட்டத்தைச் சேர்ந்தது.

"**பல்குன்றக் கோட்ட**மென்பது தொண்டைநாட்டின் பெரும்பிரிவாகிய உச கோட்டங்களுள் ஒன்று...........'**பல்குன்றக்கோட்டத்து**ச் சிலைநாட்டுத் திருவேங்கடம்' என்னும் சிலாசாசன (கல்வெட்டு) வாக்கியத்தால் திருவேங்கடமலை (திருப்பதி)யும் பல்குன்றக் கோட்டத்துள்ளதென்று தெரிகிறது. "குன்றுசூழிருக்கை நாடுகிழவோனே" (மலைபடு. 583) என்பது இதனை வலியுறுத்தும்."

(பத். சாமிநா. பக். 57.)

தெலுங்கு மொழியை முதன்முதலாகக் குறிப்பிட்ட அயலார் 7-ம் நூற்றாண்டினரான ஹுவென் த்சாங் (Hwen Thsang) என்னும் சீனத் திருப்போக்கர் (யாத்திரிகர்).

“ சுரஞ்செல் கோடியர் கதுமென விசைக்கு
நரம்சொடு கொள்ளா மத்தத் தாங்கட்
கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங் குன்ற நீந்தி ” (நற். 212),

என்று குடவாயிற் கீரத்தனாரும்,

“ குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் **கட்டி** நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசி னவருடை நாட்டே ” (குறுந். 11),

என்று மாமூலனாரும்,

“ நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புன னன்னாட்டு ” (சிலப். 8: 1, 2).

என்று இளங்கோவடிகளும் பாடியிருப்பதால், கடைக் கழகக் காலத்தில் வேங்கடத்திற்குத் தெற்கில் தெலுங்கு வழங்கவில்லை யென்பது வெளிப்படை.

நம்பியாரூரர், (சுந்தரமூர்த்தியடிகள்) சேரநாடு சென்று மீண்டபோது, அவர் சேரன் பெருமாள் நாயனாரிடம் பெற்ற பொருளைத் திருமுருகன்பூண்டியில் சில வடுகர் (அல்லது வடுக வடிவில் வந்த சிவ பூதங்கள்) வழிப்பறித்ததால், 9-ம் நூற்றாண்டிலேயே வடுகர் கொங்கு நாட்டில் குடியேறி விட்டனர் என்பது போதரும்.

“ கொடுகுவெஞ்சிலை **வடுக வேடுவர்** விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்கு மிடம்
முடுகுநாறிய வடுகர்வாழ் முருகன் பூண்டிமா நகர்வாய்
இடுகுநுண்ணிடை மங்கைதன்னொடும் எத்துக்கிருந்தீரெம்
[பிரானிரே.”

என்பது நம்பியாரூரரின் திருமுருகன் பூண்டிப் பதிக முதற் செய்யுள்.

“ வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை என்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார் ”

(தொல். சொல். சேனா. மேற். 51)

என்பது ஒரு பழஞ் செய்யுள்.

இவற்றினாலும், யாழ்ப்பாண அகராதியில் வடுகன் என்னும் பெயருக்கு மூடன் என்றும் பொருள் கூறியிருப்பதாலும், முதன்முதலாய்த் தமிழ் நாட்டிற்கு வந்த வடுகர் (கம்பளத்தார்) முரடராயிருந்தன ரென்றும், தமிழர் அவரொடு உறவாட வில்லை யென்றும் அறியலாம்.

"நீரெலாம் சேற்றுநாற்றம் நிலமெலாங் கல்லும் முள்ளும்
ஊரெலாம் பட்டிதொட்டி உண்பதோ கம்பஞ்சோறு
பேரெலாம் பொம்மன் திம்மன் பெண்களோ நாயும் பேயும்
காருலாங் கொங்கு நாட்டைக் கனவிலுங் கருதொணாதே"

"வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே"

என்று கம்பர் பாடியிருப்பதால், 12-ம் நூற்றாண்டில் தமிழ் நாட்டில் வடுகர் நிலைத்து விட்டனர் என்பதை அறியலாம்.

கோதாவரி, கிருட்டிணா கோட்டங்களைச் சேர்ந்ததும் கீழைச் சாளுக்கியம் எனப்பட்டதுமான வேங்கைநாட்டை 10-ம் 11-ம் நூற்றாண்டுகளிற் சோழ மன்னர் ஆண்டு வந்தனர்; கீழைச் சாளுக்கியருடன் மணவுறவும் பூண்டனர். முதலாம் இராசேந்திர சோழன் வடக்கிற் படை யெடுத்துச் சென்று கங்கை நாடு வரை அடிப்படுத்தினான். கி. பி. 1115-ல் முதற் குலோத்துங்கன் தனக்குக் கலிங்க நாட்டுத் தெலுங்க மன்னன் திறை கொடுக்க மறுத்தமை காரணமாகத் தன் படைத் தலைவனை கருணாகரத் தொண்டைமானை ஏவி அவனொடு பொருது வென்றான்.

"மெய்க்கூத்தாவது: தேசி வடுகு சிங்களமென மூவகைப்படும்", "சுற்றுதல் எறிதல் உடைத்தல் முதலாகிய வடுகிற்குரிய கால்களும்", "ஒற்றையும் இரட்டையும், தேசிக் கூறுகலானும் இரட்டையும் இரட்டைக்கிரட்டையும் வடுகிற்கூறுகலானும்," "வடுகும் மட்டதாள முதலாக ஏக தாள மீறாக வைசாக நிலையிலே ஆடி முடித்த பின்னரென்க. என்னே? "வைசாக நிலையே வடுகிற்கும் வரையார்"

என்றாராகலின்." என்று (சிலப். 3 உரை) அடியார்க்கு நல்லார் கூறியிருப்பதால், கடைக் கழகக் காலத்திலேயே வடுகக் கூத்தும் தமிழ்க் கூத்தின் ஒரு பகுதியாகக் கொள்ளப்பட்டிருந்தமை புலனும். இதனல், வடுகு தோன்ருத முதற் காலத்திலேயே நாடகத் தமிழ் தோன்றிற்றென்றும், வடுக நாட்டுப் பகுதிக்குரிய தமிழ்க் கூத்தே பின்பு வடுகு என்னும் தனிப் பெயரால் வழங்கத் தலைப்பட்டதென்றும் உய்த்துணரலாம். மாற்றம் (மாட்ட) செப்பு முதலிய தமிழ்ச் சொற்களே பிற்காலத்தில் சிறிது பொருள் திரிந்து தெலுங்குச் சொற்கள் என்று சொல்லப்படுவதை இதனுடன் ஒப்புநோக்குக.

'வடுகரசராயிரவர் மக்களை உடையர்' 'வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய வரசர்' என்னுந் தொடர்களைச் சேனாவரையர் எடுத்துக்காட்டாகக் கூறியிருப்பதால், இடைக் காலத்தில் வடுக வரசர்க்கும் சோழர்க்கும் ஏற்பட்டிருந்த தொடர்பு புலனும்.

15-ம் நூற்ருண்டில் வீர சேகர பாண்டியனுக்கும் சந்திர சேகர சோழனுக்கும் பகைமை நேர்ந்தபோது, முந்தியவன் வேண்டுகோட்கிணங்கி விசயநகரத் தரசராகிய கிருட்டின தேவராயர் தம் படைத் தலைவராகிய நாகம நாயக்கரை அனுப்ப, அவர் சென்று சோழனை வென்ருர். அதிலிருந்து சோழ பாண்டி நாடுகள் நாயக்க மன்னர் கைப்பட்டன. தெலுங்கர் பலர் தமிழ்நாட்டிற் குடியேறினர். அவருள் நாய்க்கர் (நாயுடு), இரெட்டியார் என்பவர் தலைமையானவர். கம்பளத்தாரும் சக்கிலியருமாகிய தெலுங்கர் 9-ம் நூற்ருண்டிற்கு முன்பே தமிழ்நாட்டிற் குடியேறி விட்டனர். அவரே முதன்முதல் வடுகர் எனப்பட்டவர்.

15-ம் நூற்ருண்டிற்குப் பின் பாண்டியர் வலிகுன்றியதாலும், தெலுங்கர் பலர் தமிழ் நாட்டிற் குடியேறி விட்டதாலும், பாண்டி நாட்டில் பல தெலுங்க வேளிரும் குறுநில மன்னரும் தோன்றினர். அங்ஙனந் தோன்றிய வேளகங்

களுள் எட்டயபுரமும் பாஞ்சாலங் குறிச்சியும் தலைமை யானவை.

தெலுங்கர் தமிழ்நாட்டிற் குடியேறவே, தனித் தமிழ் நிலையங்களாயிருந்த திருவேங்கடம், திருக்காளத்தி, திருத்தணிகை முதலிய வடபாற் சிவநகரங்கள் இருமொழி நிலையங்களாக மாறிவிட்டன. தெலுங்குநாட்டை யடுத்த தமிழரும் தெலுங்கைக் கற்றுத் தெலுங்கராக மாறிவரு கின்றனர்.

தெலுங்கு தற்போது மிகுந்த வடமொழிக் கலப்புள்ள தாயிருந்தாலும், ஒரு காலத்தில் வடமொழி மணமே யில் லாத கொடுந்தமிழ் வகையாயிருந்ததே. இன்றும் தெலுங்கு நாட்டூர்ப் பெயர்கள் பல, ஊர் (பாலூரு), புரம் (அனந்த புரம்), மலை (அனிமல), குடி (தேவகுடி), கோடு (முனு கோடு), கோட்டை (கண்டிகோட்ட), பேட்டை (நேக் குணம் பேட்ட), பள்ளி (கொத்த பல்லி), குன்றம் (பெல்லம் கொண்ட), கல் (மின்னகல்லு), பாலம் நாய னிப்பாலம்), கூடம் (நடிகூடெம்), குளம் (ஸ்ரீகாகுளம்), வீடு (பட்லவீடு), மந்தை (எல்லமந்த), புரி (நெமலிபுரி), சாலை (கண்டசால), பட்டினம் (விசாகபட்ணம்), பாடு (தாவிப்பாடு) தலை (குர்னூதல) எனத் தனித்தமிழ் ஈற்றண வாயே யுள்ளன.

### தெலுங்கு திரியக் காரணங்கள்

(1) தட்பவெப்ப நிலையும் நிலத்தியல்பும்.
(2) மக்கட்பெருக்கம்.
(3) பண்டை யிலக்கிய விலக்கணமின்மை.
(4) தமிழொடு உறவுகொள்ளாமை.
(5) தமிழ் நூல்களைக் கல்லாமை.
(6) ஒலிமுறைச் சோம்பல்.
(7) வடசொற் கலப்பு.

## III. தெலுங்குச் சொல் வரிசைகள்

### 1. பெயர்ச் சொற்கள்

க. முவிடப் பெயர். (இடம் தமிழும் வலம் தெலுங்கும்)

யான், நான் - நேனு; யாம் - மேமு; நாம் - மனமு; நீன், நீ - நீவு; நீர் - மீரு; அவன் - வாடு; அவர் - வாரு; அது - அதி (அவள், அது); அவை - அவி; தான் - தானு; தாம் - தாமு, தமரு.

உ. வினப்பெயர்.

எவன் - எவடு; எவர் - எவரு; ஏது (>எது) - ஏதி (எவள், எது); ஏவை - ஏவி.

ங. முறைப்பெயர்.

தாத்தா - தாத்த; தந்தை - தண்ட்ரி; அண்ணன் - அன்ன; தம்பின், தம்பி - தம்முடு; மாமன் - மாம; பிள்ளை - பிட்ட, பில்ல; அவ்வை - அவ்வ; தள்ளை - தல்லி; அக்கை - அக்க; அத்தை - அத்த; பிடுகு - கொடுக்கு, அப்பன் - அப்ப,

ச. விலங்குப் பெயர்.

ஆ - ஆவு; எருது - எத்து; எருமை - எனுகு; குக்கல் - குக்க; கழுதை - காடிதெ; குதிரை - குர்ரமு; கிடாரி - கேடெ; பன்றி - பந்தி; ஏழகம் - ஏலிக்க; கொறி - கொர்ரெ; புலி - புலி; எண்கு - எலுகு; யானை - ஏனுக; நரி - (நரிக) நக்க; சிவிங்கி - சிவங்கி.

ரு. பறவைப் பெயர்.

கோழி - கோடி; ஈ - ஈக; வாத்து - பாத்து; மயில் - நெமலி; காக்கை - காக்கி; மின்வெட்டும் பூச்சி - மினுகுருப்பூச்சி; புறவம் - பாவுரமு; தேனீ - தேனெட்டீக; கொக்கு - கொங்க்க; கூகை - கூப; உள்ளான் - உள்ளங்கி.

சு. ஊர்வனவற்றின் பெயர்.

பாம்பு - பாமு; பேன் - பேனு; பல்லி - பல்லி; புழு - புருகு, புருவு; தேள் - தேலு; மூங்கா - முங்கீசு; எலி - எலுக; சுண்டு (எலி)- சுஞ்சு.

எ. நீர்வாழ்வனவற்றின் பெயர்.

மீன் - மீனு; சுறா - சோர; முதலை - மொசலி; நண்டு - எண்ட்ரி; சிப்பி - சிப்பி; நத்தை - நத்த; நீர்நாய் - நீருக்குக்க.

அ. மரஞ்செடிப் பெயர்.

மரம் - ம்ரானு; செடி - செட்டு; சீத்தா - சீத்தா; வேம்பு - வேமு; அத்தி - அத்தி; அரசு - ராய்; பலா - பனச; அன்னுசி - அன்னுச; மா - மாமிடி; தாளி - தாட்டி; அரம்பை - அரட்டி; தெங்கு - தெங்காயச்செட்டு; வாதுமை - பாதமு; வெதிர் (மூங்கில்) - வெதுரு; மல்லிகை - மல்லிக்க; தாமரை - தாமர; நாற்று - நாறு; புதர் - பொத; புல் - புல்லு; பாசி - பாச்சி, அகில் - அகரு.

கூ. கருவிப் பெயர்.

ஆணி - ஆணி; காறு - கர்ரு; கத்தி - கத்தி; கத்தரி - கத்திரி; கோடாலி - தொட்டலி; காண்டி - கரிட்டெ; ஈட்டி - ஈட்டெ; அலகு-அலுகு, ஆக்கு; கறுழ் - கள்ளெமு; முள் - முள்ளு; துப்பாக்கி - துப்பாக்கி; அகப்பை - அப்பக்க; கேடகம் - கேடெமு; சல்லடை - சல்லெட; நிறுவை (தராசு) - நிலுவ; கதிர் - கதுரு; வில் - வில்லு; கோல் - கோல; கம்பி - கம்மி; கட்டை - கட்டெ; அம்பு - அம்மு; வாணம் - பாணமு; பீரங்கி - பிரங்கி; வல்லயம் - பல்லெமு; செக்கு - செக்கு; உரல் - ரோலு; நாஞ்சில் - நாகேலு; திரிகல் - திருகல்லு; முசலம் (உலக்கை) - முசலமு; கொடுவாள் - கொடவலி; அரம்பம் - ரம்பமு; உளி - உலி; கட்டாரி - கட்டாரி, வாள் - வாலு, அங்குசம் - அங்குசமு.

கo. ஐம்பூதப் பெயர்.

நிலம் - நேல; நீர் - நீரு; நெருப்பு - நிப்பு; கால் - காலி; ஆவி - ஆவி; விண் - வின்னு, வினு.

கக. உலோகப் பெயர்.

இரும்பு - இனுமு; உருக்கு - உக்கு; வெள்ளி - வெண்டி; வங்காரம் - பங்காரு; பித்தளை - இத்தடி; (எர்) இராகி - ராகி (செம்பு); தகரம் - தகரமு.

கஉ. ஊர்திப் பெயர்.

வண்டி, பண்டி - பண்டி; ஓடம் - ஓட; படகு - படவ; நாவாய் - நாவ; தோணி - தோனெ; சிவிகை - சிபுக்க; பாடை - பாட; தேர் - தேரு.

கங. உணவுப் பெயர்.

தோசை - தோச; இட்டலி - இட்டென; பச்சடி - பச்சடி; இரை - எர; தீனி - தீனி; தின்றி - திண்டி; உப்பு - உப்பு, பால் - பாலு; வெண்ணெய் - வென்ன; அப்பம் - அப்பமு; கஞ்சி - கஞ்சி; நெய் - நேயி, தேன் - தெனெ; தவிடு - தவுடு; பருப்பு -

பப்பு; பொட்டு - பொட்டு; உமி - உமக்க; சாமை - சாமலு; கள் - கள்ளு; மிளகு - மிரியமு; மிளகாய் - மிரப்பக்காய; உள்ளி - உல்லிகட்ட; வெள்ளுள்ளி - வெல்லுல்லி; பயறு - பெசலு, இறைச்சி- எறச்சி; அட்டு - அட்டு; அப்பளம் - அப்பளமு, ஆமைவடை - ஆமவட,

கச. ஆடையணிப் பெயர்

பட்டம் - பட்ட (துணி); பட்டு - பட்டு; கம்பளி - கம்படி; நடுக் கட்டு - நடிக்கட்டு (அரைக்கச்சை); கச்சை - கச்ச; பாகை - பாக; கடிகை - கடியமு; பாசி - பூச; மணி - மணி; பவழம் - பகடமு; செருப்பு - செப்பு; அட்டிகை - அட்டிகலு; சட்டை - சட்ட; உடுப்பு.

கரு. நட்டுமுட்டுப் பெயர்.

பெட்டி - பெட்ட; குடை - கொடுகு; தொட்டி - தொட்டி; படுக்கை - படக்க; சாய்கை - சாய்ய; மெத்தை - மெத்த; படுப்பு - பருப்பு; புட்டி - புட்டி.

கசு. இடப் பெயர்.

நாடு - நாடு; தீவ - தீவி; வைப்பு - வைப்பு; இடம் - எடமு; தாவு - தாவு; இல் - இல்லு; குடிசை - குடிசெ; அறை - அர; தெரு - தெருவு; ஊர் - ஊரு; சந்து - சந்து; தோட்டம்-தோட்ட; கோட்டை- கோட்ட; சாலை - சால; புறக்கடை - பெறடு; பந்தல் - பந்தலி; தோப்பு - தோப்பு; கடல் - கடலி; குன்று - கொண்டெ; கணவாய் - கணம; களஞ்சியம் - கணஜமு; ஆறு - எரு; புலம் - பொலமு; களம் - கள்ளமு; செறு (வயல்) - சேனு; வயல் - பயலு; மண் - மன்னு; குகை - குஹ; குண்டு - குண்ட்ட; கால்வாய் - காலுவ. எல்லை - எல்ல; அடவி - அடவி; காடு - காடு; பள்ளி - படி; அகழி - அகட்த: அண்டை - அண்ட; அங்கணம் - அங்கணமு; அணைக்கட்டு - அட்டக்கட்ட.

கஎ. காலப் பெயர்

காலம் - காலமு; நிலா - நெல (மாதம்); பகல் - பகலு; ஆண்டு- எடு; வேளை - வேள; நெருநல் - நின்ன; முன்னாள் - மொன்ன: இன்றைக்கு - நேட்டிக்கு; இராத்திரி - ராத்ரி; சாயுங்காலம் - சாயங் காலமு; பொழுது-ப்ரொத்து; பருவம் - பருவமு; சமையம் - சமயமு; நாள் - நாடு.

கஅ. சினைப் பெயர்

தலை - தல; நுதல் - நுதுரு; கண் - கன்னு; கண் புருவம் - கனுபொம; கண்ணீர் - கன்னீரு; மூக்கு - முக்கு; பல் - பல்லு; நாக்கு-

நாலுக; செவி - செவி; தாடி - தாடி; தவடை - தவட; முகம் - முகமு; மீசை-மீசமு; எச்சில்-எங்கிலி; மிடறு-மெட; கை - சேயி: முட்டி - முவ்டி; முழங்கை - மோச்செயி; விரல் - வேலு, வ்ரேலு; உகிர் - கோரு; உரம் - உரமு; உள்ளம் - உல்லமு; நடுவ - நடுமு; தொடை - தொட; முழங்கால் - மோக்காலு; குதிங்கால் - குதிகாலு; தோல் - தோலு; அகடு - கடுப்பு; அரத்தம் - ரத்தமு; நரம்பு - நரமூ; நாடி - நாடி; கொழுப்பு - கொவ்வு; கொம்பு - கொம்மு; வேர்-வேரு; அலக்கு - ஆக்கு: கொம்பு (கிளை) - கொம்ம; நார் - நார; முள் - முல்லு; வார் - வாரு; மூளை - மூலுக; (marrow); நெய்த்தோர் - நெத்துரு; பித்தம் - பித்தமு; எலும்பு - எமுக்க; மூளை - மூலுக; தோகை - தோக; இறகு - ஈக்க; காய் - காய; மொக்கு - மொக்க; பூ - புவ்வு; பின்பு - வீப்பு; பட்டை - பட்ட; முளை - மொலக்க (shoot); அடி - அடுகு; மருமம் - ரொம்மூ.

கக. உறுப்பறைப் பெயர்.

கூன் - கூனு; குருடு - குட்டு; மூங்கை, மூகு - மூக; நொண்டி- மொண்டி; செவிடு - செவடு; மூடன் - மூடுடு.

உ௰. வண்ணப் பெயர்.

வெள்ளை - வெல்ல; தெள் - தெளுப்பு (வெள்ளை); நீலம்-நீலமூ; மால் - நலுப்பு (கருப்பு); எர் - எருப்பு (சிவப்பு): காவி - காவி; பச்சை - பச்ச: பழுப்ப - பசுப்பு (மஞ்சள்); செம்பு - கெம்ப்பு.

உக. எண்ணுப் பெயர்.

ஒன்று - ஒகட்டி; இரண்டு - இரடு; மூன்று - மூடு; நால்கு, நான்கு - நால்கு; ஐந்து - அயிது; ஆறு - ஆறு; ஏழு - எடு; எட்டு - எனிமிதி; ஒன்பது - தொம்மிதி; பத்து - பதி; பதினொன்று - பத கொண்டு, பதுனேகட்டி; பன்னிரண்டு - பன்னெண்டு, பண்ட் ரெண்டு; பதின்மூன்று - பதமூடு, பதுமூண்டு; பதினான்கு - பத்னு லுகு, பதுநாலுகு; பதினைந்து - பதிஹேனு, பதுனயிது; பதினாறு - பதஹாரு, பதுனாறு; பதினேழு - பதிஹேடு, பதுனேடு; பதினெட்டு- பத்தெனிமதி, பதுனெனிமிதி; பத்தொன்பது - பந்தொம்மிதி; இரு பது - இருவை, இருவதி; முப்பது - முப்பை, முப்பதி; நாற்பது - நலுபை, நலுவதி; ஐம்பது - யாபை, ஏம்பதி; அறுபது - அருவை, அறுவதி; எழுபது - டெப்பை, டெப்பதி; எண்பது - யெனபை, எனுபதி; தொண்பது - தொம்பை, தொம்பதி; நூறு - நூரு, நூறு; முதல் - மொதட்டி; நாலா - நானு.

உஉ. சுவைப் பெயர்.

தீம் - தீப்பு; கைது - சேது; காரம் - காரமு; உப்பு-உப்பு; புளிப்பு - புலுசு; துவர் - வகரு.

உங. நிறைப் பெயர்.

பலம் - பலமு; சேர் - சேரு; வீசை - வீசு; மணங்கு - மணுகு,

உச. நோய்ப் பெயர்.

தலைநோவு - தலநொப்பி; புண் - புண்ட்டி; குரு - குருப்பு; கட்டி - கட்ட (d); பெரியம்மை - பெத்தம்ம வாரு; சின்னம்மை - சின்னம்மவாரு; திமிர் - திமுரு; காயம் - காயமு; நமை - நவ; காமாலை - காமால; மூலம் - மூலமு; சொறி - சொரி.

(2) வினைச்சொற்கள்.

க. சில முக்கிய வினைகள்.—எண் - எஞ்ச்சு, என்னு; எரி - எரியு;

வா - (வ்)ரா; போ - போ, போவு; நில் - நிலுச்சு; பரி(ஓடு) - பரு, பருகெத்து; வணங்கு (வளை) - வங்கு; எடு - எத்து; தின் - தின்னு; படு - படு; எழு - லெய்; ஈ - இச்சு; கொள் - கொனு; தும்மு - தும்மு; உமி, உமிழ் - உமியு; ஊது - ஊது; திருமு-திருகு; அடி - அடுச்சு; போடு - பெட்டு; நகு - நகு, நவ்வு; அழு - ஏடுச்சு; நக்கு - நாக்கு; கூவு - கூயு; விளி - பிலுச்சு; இழு - ஈடுச்சு; தூக்கு - தூக்கு; தட்டு - தட்டு; அதிர் - அதரு; நறுக்கு - நருக்கு; தொளை - தொளச்சு; முழுகு - முணுகு, முனுகு; சா - சச்சு; மாற்றமாடு-மாட்லாடு; நட - நடுசு; துடை - துடுச்சு; ஏற்று - எத்து; முடி - முகிஞ்சு; வை - வெய்; பிடி - பெட்டு; வாடு - வாடு; மேய் - மேயு; மற-மருச்சு; ஆள் - ஏலு; முனங்கு - மூலுகு; பாடு - பாடு; பிசை - பிசக்கு; அறி - எருகு; ஒடுங்கு - ஒருகு; பற - பாறு; முதிர் - முதுரு; கரை - கருகு; துண்டி - துண்டிஞ்சு; விழுங்கு - ம்ரிங்கு; பிடுங்கு - பீக்கு; முக்கு - முஞ்சு; பொழி - போயு; நம்பு - நம்மு; தூங்கு - தூகு; வதி - வதிஞ்சு; நீந்து - ஈது; புதை - பூடுச்சு; பூசு - பூயு; கல - கலியு; ஈன் - ஈனு; சிலுப்பு - சிலுக்கு; என் - அனு; சேர் - சேரு; விடு - விடுச்சு; கழுவு - கடுகு; அண்டு - அண்டு; மெச்சு - மெச்சு; புகழ் - பொகடு; கலி - கலுகு; பிற - புட்டு; கிள்ளு - கிள்ளு; ஆடு - ஆடு; நெட்டு - நெட்டு; பொரு - பொரு; வித்து - வித்து; தப்பு - தப்பு; கீறு - கீறு; உடம்படு - ஒடம்படு; முட்டு - முட்டு; மோது - மோது; ஒப்பு - ஒப்பு; கட்டு - கட்டு; திட்டு - திட்டு; முத்த மிடு - முத்துப்பெட்டு; மதி - மதி; நீடு - நீடு; விசிறு - விசரு, விசுரு; பரவு -

பருச்சு; மொத்து - மொத்து, வேண்டு - வேடு; கூடு - கூடு, அகப்படு- அக்கப்படு, அடங்கு - அட்டு, அடுக்கு - அடுக்கு, அனுப்பு - அனுப்பு, அமர் - அமரு, ஆறு - ஆறு; ஆராய் - ஆரயு; எற்படு - எர்ப்படு; உப்பு- உப்பு.

உ. வினைச்சொல் வடிவங்கள்.

'செய்' என்னும் வினை

| | தமிழ் | தெலுங்கு |
|---|---|---|
| பகுதி— | செய் | சேசு, சேயு |
| ஏவல் ஒருமை— | செய் | சேயி, செய்யி, சேயுமு |
| ,, பன்மை— | (1) (செய்யும்) செய்யுங்கள் | சேயண்டி, செய்யண்டி |
| | (2) செய்ம்மின் | (2) — |
| (படர்க்கைஆண்பால்) | | |
| இறந்தகால வினைமுற்று | செய்தான் | சேசினாடு |
| நிகழ் ,, ,, | செய்கிறான் | சேஸ்தாடு |
| எதிர் ,, ,, | (1) செய்வான் | (1) — |
| | (2) செய்யும் | (2) சேசுனு, சேயுனு |
| இறந்தகாலப் பெயரெச்சம் | செய்த | சேசின |
| நிகழ் ,, ,, | செய்கிற } | சேசே |
| எதிர் ,, ,, | செய்யும் } | |
| நிகழ் ,, ,, | (1) செய்துகொண்டுள்ள | (1) சேசு கொனியுன்ன |
| | (2) — | (2) சேஸ்துன்ன |
| இறந்தகால வினையெச்சம் | செய்து | சேசி |
| நிகழ் ,, ,, | செய்ய | சேய, செய்ய |
| எதிர் ,, ,, | செய்யின் } செய்தால் } | சேஸ்தே |
| தொடர்ச்சி ,, | (1) செய்துகொண்டு | (1) சேசு கொனி |
| | (2) ,, | (2) சேஸ்து |
| தொழிற் பெயர் | செய்தல் } செய்கை } செயல் } | சேயுட்ட, சேசுட்ட சேயடமு, செய்யடமு |
| செயப்பாட்டு வினைப்பகுதி | செய்யப்படு | சேயபடு |

தற்பொருட்டு

| | | |
|---|---|---|
| வினைப்பகுதி | செய்துகொள் | சேசுகொனு |
| பிறவினைப்பகுதி | செய்வி | சேயிஞ்ச்சு |

குறிப்பு: (1) செய் என்னும் வினையின் தெலுங்கு வடிவங்களிலெல்லாம் முதல் சகாரத்தை 'ச்ச' என்றாற்போல வலிதாய் உச்சரிக்க.

(2) 'அடம்' என்னும் தொழிற்பெயர் விகுதி தமிழுக்குமுண்டு.

௩. 'ஆகு' என்னும் துணைவினைத் திரிபு.

| | தமிழ் | தெலுங்கு |
|---|---|---|
| பகுதி | ஆ, ஆகு | அவு |
| ஏவல் ஒருமை | ஆகு | கா, கம்மு |
| ,, பன்மை (படர்க்கை ஆண்பால்) | (ஆகும்) ஆகுங்கள் | கண்டி |
| இறந்தகால வினைமுற்று | ஆயினன் | அயினடு |
| நிகழ் ,, ,, | ஆகிறான் | அவுத்தாடு |
| எதிர் ,, ,, | 1. ஆவான் | 1. — |
| | 2. ஆகும் | 2. அவுனு |
| இறந்தகாலப் பெயரெச்சம் | ஆயின | அயின |
| நிகழ் ,, ,, | ஆகிற | அய்யே |
| எதிர் ,, ,, | ஆகும் | அய்யே |
| இறந்தகால வினையெச்சம் | ஆய், ஆகி | அயி |
| நிகழ் ,, ,, | ஆக | கா |
| எதிர் ,, ,, | ஆயின், ஆனால் | அயித்தே |
| தொடர் ,, ,, | 1. ஆய்க்கொண்டு | 1. அயிக்கொனி |
| | 2. — | 2. அவுத்து |
| தொழிற்பெயர் | ஆதல், ஆகை | அவுட்ட, காவடமு |
| கட்டளை வினை | ஆகவேணும் (ஆகவேண்டும்) | காவால |
| எதிர்மறை வினை | ஆகாது | காது |
| விலக்கிணைப்புச்சொல் | ஆயினும் | அயினனு |
| இணக்க விடைச்சொல் | ஆம் (ஆகும்) | அவுனு |

கவனிப்பு: ஆகு என்பது தெலுங்கில் க் + ஆ என்று பிரிந்து முன்பின்னாய் மாறி, 'கா' என இலக்கணப்போலி (Metathesis)

யாதல் காண்க. ஆருங்கள் என்பதில் 'ங்கள்' என்னும் கூறு 'ண்டி' என்றாதலையும் கவனிக்க.

**(3) பெயரெச்சங்கள்:**

சின்ன - சின்ன; பெரிய - பெத்த; கெட்ட - செட்ட; வேறு, வேறே - வேரே; வெற்று - வட்டி; நீள, நீடிய - நிடுத; குறு - குருச்ச; உள்ள - உன்ன; இலாத - லேனி; புது - கொத்த; பழைய - பாத்த, அரு - அருது, இள - எல; எல்லா - எல்ல, ஒண்டி - ஒண்ட்டி.

**(4) வினையெச்சங்கள்.**

மெள்ள - மெல்லகா; சரியாய் - சரிகா; முற்றிலும் - பொட்டிகா; முந்தி - முந்துசா; கெட்டியாய் - கட்டிகா; மிகுதியாய் - மிக்கிலிகா.

**(5) இடைச் சொற்கள்**

ஏ - ஏ; ஓ - ஓ; ஆவா, ஆசா - ஆஹா; ஓகோ - ஓஹோ; அடே - அரே; அக்கடா - அக்கடா; அப்பா - அப்பா; ஐயோ - அய்யோ; மற்றும் - மறியு; மறித்தும் - மரல; சரி - சரி; குறித்து - குரிஞ்சி; முந்தி - முந்து, அதோ - அதிகோ,

உம் - உன்னு, னு, னி, யு; கள் - லு; ங்கள் - ண்டி.

கூட - கூடா; கு - கு, கி; மீது - மீத; கீழ் - கிந்த; மேனயின; பின்னுக்கு - வெனுக்க; உள் - லோ; உள்ளுக்கு - லோக்கி; உளுப்பட - லோபல.

**(6) உரிச்சொற்கள்**

கடு (மிகு) - கடு; வடி (கூர்) - வாடி; சால் - சாலு; சீர்த்தி, கீர்த்தி - கீர்த்தி.

**குறிப்பு:** தமிழில் உரிச்சொல்லா யிருப்பவை தெலுங்கிலும் உரிச்சொல்லா யிருக்கவேண்டும் என்னும் யாப்புறவில்லை. உலக வழக்கற்ற செய்யுட் சொல்லே அல்லது செய்யுட்பொருள்பட்ட சொல்லே உரிச்சொல்லென் றறிக.

### சொற்றொடர்

**தனித்திரவிடச் சொற்றொடர் :**

ஆ சின்னவாடு இப்புடு வ்ராஸ்துன்னடு.—அச் சிறுவன் இப்போது வரைந்து (எழுதிக்) கொண்டிருக்கிறான்.

எல்லுண்டி ஆவுலு ஆ பொலமுலோ மேஸ்தவி.—நாளைநின்று ஆக்கள் அப்புலத்தில் மேயும்.

இதிவரக்கு செப்பின பனி நீவு சேயக போகா இங்க்கா பனி எட்லா இஸ்தானு.—இதுவரைக்கும் சொன்ன பணி நீ செய்யாம லிருக்க (செய்யாது போக) இன்னும் பணி எப்படிக் கொடுக்கிறது (கொடுப்பேன்) ?

நேனு அதனிக்கி ஆ புஸ்தகமு இச்சினானனி மீத்தோ எவரு செப்பினாரு ?—நான் அவனுக்கு அப்பொத்தகத்தைக் கொடுத்தே னென்று உனக்கு எவர் சொன்னார் ?

ஆரியங்கலந்த சொற்றொடர் :

நேனு ஆ பனி சேயலேக்க போயினந்துன, ஜீதமு இவ்வ குண்டா வெள்ளகொட்டினாடு.—நான் அப்பணி (வேலை)யைச் செய் யாது போனதினால், எனக்குச் சம்பளம் ஈயாமல் (கொடாமல்) துரத் திவிட்டான். வெள்ளகொட்டு=போகடி.

ஆயன பாக்யவந்துடை உன்னப்பட்டிக்கி, தரித்துருனிவலெ ப்ரவர்த்திஸ்துன்னாடு.—அவர் செல்வராயிருந்தாலும் வறியவர்போல நடக்கிறார்.

ஈ ரோஜு படவலு ரெண்டு கண்ட்டலதாகா உண்டக, த்வரகா வெள்ளிப் போயினவி.—இன்றைக்குப் படகுகள் இரண்டு மணி வரைக்கும் இராமல் சுருக்காய்ப் போய்விட்டன.

வர்த்தகமுவல்ல மீக்கு சாலா லாபமு கலுகுத்துன்னதா ?—வாணிகத்தால் உமக்குச் சாலவும் ஊதியம் பெருகுகிறதா ?

## ஒரு கதை (பார்ப்பனியும் கீரிப்பிள்ளையும்)

"ஒக்க ஊரிலோ ஒக்க ப்ராஹ்மணுடு கலடு. அதனிவத்த ஒக்க முங்கி உண்டெனு. அதடு தான்னி பஹுஜாக்ரதகா பெஞ்ச்சுசு உண்டெனு. ஒக்கநாடு அதனிகி ஒக்க ஊரிகி போவலசின பனி வச்சினதி. கனுக, ஆ முங்கினி தன பார்யக்கு ஒப்பகிஞ்ச்சி போயெனு. மருநாடு ஆமெ தன பிட்டனு தொட்லலோ நித்ரபுச்சி, ஆ முங்குனி தொட்ல தக்கிர காவலி உஞ்ச்சி, நீள்லு தோடுகொனி ராவடானக்கு வெள்ளினதி. அந்தலோ, பிட்ட நித்ரிஸ்தா உண்டே தொட்ல வத்திக்கி ஒக்க பாமு வச்செனு. ஆ முங்கி ஆ பாமுனு பட்டி துண் டெமுலு சேசி பாரவேசி, ஜரிகின சங்கதி தல்லிக்கி தெலியச்சேய டானக்கு ஆமெவத்திக்கி வெள்ளினதி. அப்புடு, ஆமெ முங்கி

மூத்திக்கி அண்ட்டுகொனி உன்ன நெத்துரு சூச்சி, அதி தன பிட்டனு கரிச்சி சம்பினதி அனி தலஞ்ச்சுகொனி, ஆ முங்கினி கொட்டி சம்பெனு. தருவாத்த இண்டிக்கிபோயி, தொட்லலோ சுகமுகா நித்ரபோத்தூ உன்ன பிட்டனுன்னு தொட்லவத்த முங்கி பட்டி சம்பின பாமுனுன்னு சூச்சி, சாலா துக்கப்படெனு.”

இதன் மொழிபெயர்ப்பு—ஓர் ஊரிலே ஒரு பார்ப்பனன் இருந்தான். அவனிடம் ஒரு மூங்கா (கீரி) இருந்தது. அவன் அதை மிக விழிப்பாய்வளர்த்திருந்தான். ஒரு நாள் அவனுக்கு ஓர் ஊருக்குப் போகவேண்டியபணி (வேலை) வந்தது. ஆகையால் அம்மூங்காவைத் தன் மனைவியிடம் ஒப்புவித்துப் போயினான். மறுநாள் அவள் தன் பிள்ளையைத் தொட்டிலிலே தூங்கவைத்து, அம்மூங்காவைத் தொட்டிற் பக்கம் காவல்வைத்து நீர் (தண்ணீர்) இறைத்துக்கொண்டு வருவதற்குப் போனாள். அதற்குள், பிள்ளை தூங்கிக்கொண்டிருந்தபோது தொட்டிற் பக்கம் ஒரு பாம்பு வந்தது அம்மூங்கா அப்பாம்பைப் பற்றி (பிடித்து)த் துண்டஞ்செய்து போட்டுவிட்டு நடந்த செய்தியைத் தாய்க்குத் தெரியப்படுத்துவதற்கு அவளிடம் போனது. அப்போது அவள் மூங்காவின் மூஞ்சியில் ஒட்டிக்கொண்டிருந்த நெய்த்தோரை (அரத்தத்தை)ப் பார்த்து, அது தன் பிள்ளையைக் கடித்துக் கொன்றுவிட்டது என்று நினைத்துக் கொண்டு, அம் மூங்காவை அடித்துக்கொன்றுவிட்டாள். பிறகு, இல்லத்திற்குள் போய்த் தொட்டிலிலே நலமாய்த் தூங்கிக்கொண் டிருந்த பிள்ளையையும், தொட்டிற்பக்கம் மூங்கா பற்றிக்கொன்ற பாம்பையும் பார்த்துச் சாலவும் வருந்தினாள். (உஞ்சு - உண்டு என்பு தன் பிறவினை. உன்ன = உள்ள).

---

## IV. தெலுங்குத்திரிபு விளக்கம்

தமிழுக்கும் தெலுங்குக்கும் பல சொற்கள் பொதுவாயிருப்பினும், அவற்றுள் எது எதினின்று வந்ததென்று ஆராய்ச்சியில்லாதார்க்குத் தோன்றாதிருக்கலாம். ஒரு சொல்லின் இருமொழி வடிவங்களின் பொருளையும் வேரையும் ஆராயின், எது இயற் (Primitive) சொல் எது திரி (Derivative) சொல் என்று அறிந்துகொள்ளலாம்.

வெண்ணெய் (வெள் + நெய்) என்பது தமிழில் வெள்ளையான நெய் என்று பொருள்படுவது. இதன் திரிபான வென்ன என்னும் தெலுங்குச்சொல் இப்பொருளைத் தருவதன்று. தம்முன் (அண்

ணன்) என்பதற்கு எதிராகத் தமக்குப்பின் பிறந்தவனைத் தம்பின் என்றனர். அது தம்பி என உலக வழக்கில் கடைக்குறையாய் வழங்குகின்றது. ஆனால், தெலுங்கிலோ தம்முடு எனத் திரிந்து வேர்ப்பொரு ளிழந்துவிட்டது.

## தெலுங்குச் சொற்கள் தமிழில் திரிந்துள்ள முறைகள்

**(1) எழுத்துத்திரிபு.**

இ - எ : கோணி - கோனெ; விலை - வெல; திரை - தெர

உ - அ : ஊற்று - ஊட்ட; பாட்டு - பாட்ட; தட்டு - தட்ட; போக்கு - போக்க.

உ-ஒ : புகை - பொக; உடல் - ஒடலு; குழி - கோயி; முனை - மொன; குனை - கொன; முளை - மொலி; உரை - ஒர.

ஐ-அ : பொம்ம, உவம, குளிக, குப்ப, பக, மந்த, ஓட்ட, நட, மகிம, தீர்வ, கட, குத்தக, வல, மூல, கொள்ள, மாத்ர, அமரிக்க, போலிக்க (போலுகை), தொல, அல, நடத்த, வாடுக்க, வேதன, நிலுவ, சால, சேரிக்க (சேர்க்கை), விடுதல, ஒடம் படிக்க, நம்மிக்க, இட்டிக, தார, மூட்ட, வேடுக்க, தண்டன, வேட்ட, தெர்ரவ, (தெரிவை), முதலிய ஏராளமான தெலுங்குச் சொற்கள் தமிழில் ஐகார வீற்றன.

ஐ-எ : கட்டை - கட்டெ; திண்ணை - தின்னெ.

ண-ன : எண்ணிக்க - என்னுக்க; துணிக்கை - துனக்க; காணிக்கை - கானுக்க;

ந-ம : நீர் - மீரு; நாம் - மேமு.

ய-ச : உயிர் - உசுரு; பயறு - பெசலு.

ழ-ட : நீழல் - நீட; பாழ் - பாடு; மேழி - மேடி; ஊழியம்-ஊடிகமு; நாழி - நாடி.

ற-ர : வேறு - வேரு; மீறு - மீரு.

ற்ற-ட்ட : ஊற்று - ஊட்ட; புற்று - புட்ட; மாற்றம் - மாட்ட; சுற்று - சுட்டு; பற்று - பட்டு; தேற்றம் - தேட்ட.

ன்ற-ண்ட : என்று (வெயில்) - எண்ட; ஒன்றி - ஒண்டி.

சில சொற்கள் முதல்வேற்றுமையில் றகரமும் திரிவேற்றுமையில் இரட்டித்த டகரமும் பெறும்.

எ-டு : நூறு - நூறு; நூற்று - நூட்ட.

(2) சொல் திரிபு.

க. ஈறுகேடு.

ஓமம் - ஓர; தெப்பம் - தெப்ப; சாயம் - சாய; மாயம் - மாய; பொத்தல் - பொத்த; அஞ்சல் - அஞ்செ.

உ. ஈறுமிகை.

தெய்வமு, கோணமு, எல்மு, பக்கமு, பாகமு, சங்கமு, மேளமு, கீலு, காரு, மதமு, கொட்டமு, நூலு, சமமு, கனமு, கூட்டமு, வேகமு, பட்டமு, தீபமு, பாடமு, கொஞ்சமு, பேரு, கோபுரமு, குலமு, நாளமு, களங்கமு, உருமு (இடி), பிசினி, பள்ளமு, சின்னமு, மந்தாரமு, கலகமு, கடினமு, மயிக்கமு, மொத்தமு, நாடகமு, குடும்பமு, ஒப்பந்தமு, காவலி, மந்தமு முதலிய எண்ணிறந்த சொற்கள் தமிழில் மெய்யீறாய் வழங்குவன.

ங. தொகுத்தல்.

திருப்பு - திப்பு; திருத்து - தித்து; உருண்டை - உண்ட; விருந்து - விந்து; சுருட்டு - சுட்ட; மருந்து - மந்து; வணக்கு(வளை) - வங்கு; காய்ச்சு - காச்சு.

ச. இலக்கணப்போலி (Transposition or Metathesis.)

அவன் - வாடு; அவர் - வாரு, காரு; இவன் - வீடு; இவர் - வீரு; இலது - லேது; நாம் - மனமு; அறை (கல்) - ராய்; உள் - லோ; ஆக - கா எழுபது - டெப்பதி; அரசு - ராஜு; எழு - லெய்.

அவன் என்பதிலுள்ள அவ் என்னும் பகுதி வ்+அ என்று மாறிப் பின்பு னகர வீறு டகர வீறாய் வாடு என்னும் வடிவம் பிறந்தது. இங்ஙனமே பிறவும்.

சில தெலுங்குச் சொற்கள் முதல் வேற்றுமையில் திரியாதிருந்து பிற வேற்றுமையில் திரியும்.

| எ-டு: முு-வே: | பி-வே: | மு-வே: | பி-வே: |
|---|---|---|---|
| அதி | தானி | அவி | வாட்டி |
| இதி | தீனி | இவி | வீட்டி |
| ஏதி | தேனி | ஏவி | வேட்டி |

ரு. உயிரிசைவுமாற்றம் (Harmonious Sequence of Vowels.)

சொற்களிலுள்ள உயிர்கள் முன் பின் வரும் உயிர்களுக்கேற்ற படி மாறுதல் உயிரிசைவுமாற்றம் எனப்படும். தமிழில் இ ஈ எ ஐ என்

பவற்றுள் ஒன்றை யிறுதியாகக்கொண்ட பெயர்களின் 4-ம் வேற்றுமை உருபு 'கி' எனத்திரிந்தும், பிறவீற்றைக்கொண்ட பெயர்களில் 'கு' எனத் திரியாதும், உலகவழக்கில் வழங்குகின்றன.
எ-டு : கிளிக்கி, கடைக்கி, வீட்டுக்கு, பலாவுக்கு.

இங்ஙனமே தெலுங்கில் கத்தி என்பது பன்மையில் கத்துலு என்று திரியும். பதில் திகில் என்பன முறையே பதுலு திகுலு என்று திரியும். சிறியிலே, பொதியில், அடிசில், கோயில் என்னும் தமிழ்ச் சொற்களும் இம்முறை பற்றியனவே.

**(3) பொருள்திரிபு.**

| சொல் | தமிழ்ப்பொருள் | தெலுங்குப்பொருள் |
|---|---|---|
| செப்பு | விடைசொல் | சொல் |
| ஈ | தாழ்ந்தவனுக்குக்கொடு | கொடு |
| கொட்டு | மேளம் அடி | அடி |
| உண்டு | உள்ளது | இரு |
| குக்கல் | குள்ள நாய் | நாய் |

**(4) இயற்கைத் தேரிப்பு (Natural Selection)**

வீடு, மனை, இல், குடி, அகம், பள்ளி முதலிய பல வீட்டுப் பெயர்களில் இல் என்பதையும், மூங்கில், கழை, பணை, வேய், அமை, வெதிர், வேழம் முதலிய பல மூங்கிற் பெயர்களில் வெதிர் என்பதையும் தெலுங்கு தெரிந்துகொண்டது இயற்கைத் தெரிப்பாகும்.

**(5) விதப்புச் சொற்கள்.**

க. மறைந்தவேரின : சதுவு, அம்மு (Sell) முதலியன.

உ. மறையாவேரின : திகு (இறங்கு), வம்பு (வளைவு) முதலியன.

இ > திகு. வள் < வம்பு.

**(6) மொழிபெயர்ப்புச் சொற்கள்.**

புகையிலை - பொகாக்கு; நாய்க்குடை (காளான்) - குக்ககொடுகு.

**(7) தொடர்ச் சொற்கள்.**

கட்டுக்கத, கட்டுமானு, கட்டுமூட்ட, தூக்குமானு, இதிவாக்கு, தப்பிஞ்சுக்கொனிப்பரு, தெலியப்பருச்சு, வென்னெலெ (வெண்ணிலா), வெலுப்பலகா (வெளிப்படையாய்), குண்டுச்சூதி; விடிகத,

நிட்டூர்ப்பு (நெட்டுயிர்ப்பு), சரியயின, சோமரி, (சோம்பேறி), ஊனு கோல, திட்டிவாக்கிலி (திட்டிவாசல்), தேனெகூடு, போக்கிரி, கட்டக்கட்டு, கொனியாடு (கொண்டாடு), நெலமாளிக, கட்டெ நிப்பு, ஓடச்சரக்கு. எற்பாச்சு, பட்டங்கட்டுமு, செல்லுச்சீட்டி, இட்டகுமுந்து, ஒண்டுவிடிச்சினயொகட்டி, மிக்கிலிகானுண்டு, கூடப்போ, நிலிப்பிப்பெட்டு, கனிப்பெட்டு (கண்டுபிடி), முந்துப் போயின, தப்பு லேதனுட்ட, நெரவேர்ச்சு, மூக்குப்பொடி, முளுகோல, எற்பாடு சேயு முதலிய எண்ணிறந்த தொடர்மொழிகள் தமிழ் முறையின.

## (8) வாக்கியங்கள்.

தெலுங்கு எவ்வளவு திரிந்திருப்பினும், இன்றும் பல வாக்கியங்கள் தமிழ்ச் சொற்களாலேயே அமைவன.

த: அவருக்கு இருவர் பிள்ளைகள்.

தெ: வாரிக்கு இத்தரு பில்லகாயலு.

த: அப் பணி செய்கிறதற்கு உனக்குப் பத்து உருபா ஈகிறேன்.

தெ: ஆ பணி சேசேதானிக்கு நீக்கு பது ரூபாயிலு இஸ்தானு.

## (9) திரியாச்சொற்கள்.

முனி, மஞ்சு, கணக்கு, ஒட்டு (oath), சேக்கு, அச்சு, மதி, தொட்டி, பொடி, சாக்கு, எதிரி, துண்டு, வித்து, பட்டி (list), தப்பு, பொட்டு, வெறி, கூலி, சக்கிமுக்கி,கொக்கி, கொண்டி, முடி, காந்தி, மட்டுப்படு, போராடு, பாசி, கொடி, மப்பு, தீர்ப்பு, வசதி, கருக்கு முதலிய எண்ணிறந்த சொற்கள் இன்றும் இருமொழியிலும் ஒரே வடிவாய் வழங்குகின்றன.

## (10) குடியேற்றப் பாதுகாப்பு (Colonial Preservation.)

தெலுங்கில் ஆ, ஈ முதலிய நெடுஞ்சுட்டும் ஏ என்னும் நெடு வினாவும் எடு (ஆண்டு), சச்சி (செத்து) முதலிய சில சொற்களும் தொன்னிலையிலுள்ளன.

இங்ஙனம் ஒரு சில சொற்கள் மட்டும் தெலுங்கில் தமிழினும் இயற்கை நிலையிலுள்ளன. இந்நிலை குடியேற்றச் சொற்காப்பின் பாற்படும்.

## IV துளு

**துளு வியல்பு.**—குடகுக்கு மிகநெருங்கி, கன்னடத்தினின்று சிறிதும் மலையாளத்தினின்று பெரிதும் வேறுபட்டுத் திருந்திய திரவிடமொழிகளுள் ஒன்றாய், தமிழ் மலையாளம் கன்னடம் தெலுங்கு என்னும் நான்கிற் கடுத்தாற்போற் சொல்லத்தக்கது துளுவாகும்.

துளுவிற்குத் தனியெழுத்தும் தனி அல்லது பழைய இலக்கியமுமில்லை. மங்களூர்ப் பேசெல் (Basel) விடைத்தொண்டரால் கன்னடவெழுத்திலும், துளுவப்பார்ப்பனரால் மலையாளவெழுத்திலும் துளு எழுதப்பட்டு வருகின்றது.

**துளுவழங்கெல்லை.**—மேல்கரை நாட்டில் கன்னடத்திற்குத் தெற்கில், சந்திரகிரி கல்யாணபுரி ஆறுகட்கிடையில், பெரும்பாலும் தாய்மொழியாகப் பேசப்படுவது துளு.

**துளுவநாட்டு வரலாறு.**—கொடுந்தமிழ் நாடுகளைப்பற்றிய,

"சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகம்"
"கொங்கணங் துளுவங் குடகம் கன்னடம்" (நன். மயிலை)

என்னும் பழஞ் செய்யுட்களில் துளுவுங் கூறப்பட்டிருப்பதால், கொங்கணம் கன்னடம் குடகு முதலிய நாடுகளைப்போன்றே, துளுவ நாடும் பழைமையானதென்றறியலாம். ஆயினும், துளுவநாட்டுக் கொடுந்தமிழ் கிளைமொழியாய்ப் பிரிந்துபோனது 16-ம் நூற்றாண்டிற்குப் பின்னரேயென்பதை உணர்தல் வேண்டும்.

துளுவநாட்டிலிருந்து பல நூற்றாண்டிற்கு முன்னரே வேளாளர் பலர் தொண்டைமண்டலத்திற் குடிவந்தனர். அவர் தொண்டைமண்டலம் துளுவ வேளாளர். அவர் மொழி தொன்றுதொட்டுத் தமிழே.

### பெயர்ச்சொல்

க. மூவிடப் பெயர்.

| | தன்மை | முன்னிலை | தற்சுட்டு |
|---|---|---|---|
| ஒருமை : | யானு | ஈ | தானு |
| பன்மை : | எங்குளு, | ஈரு, | தனுகுளு |
| | நம | நிகுளு | |

சுட்டுப் பெயர்.

| | ஆண் | பெண் | பலர் | ஒன்று | பல |
|---|---|---|---|---|---|
| அண்மை : | இம்பெ | மோளு | மேரு(ஆ) | இந்து, | உந்தெகுளு |
| | | | மோகுளு(பெ.) | உந்து, | |

| | ஆண் | பெண் | பலர் | ஒன்று | பல |
|---|---|---|---|---|---|
| சேய்மை: | ஆயெ | ஆளு | ஆரு(ஆ.)<br>ஆகுளு(பெ.) | அவு | ஐகுளு |

குறிப்பு:—(1) நம (=நாம்)—உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப் பெயர். எங்குளு (=யாங்கள்)—தனித்தன்மைப் பெயர்.

(2) ஈரு (நீர்), ஆரு (அவர்) என்பவை உயர்வுப் பன்மை (Honorific plural) யாக வழங்கும்.

௨. வினாப் பெயர்,

நீயெரு=யார்? தாதவு=யாவது? யாது? தானெ=என்ன?

௩. மக்கட் பெயர்,

ஆள், ஒண்ட்டிகெ (ஒண்டிக்காரன்), கள்வெ (கள்வன்). குசவெ (குசவன்), செம்பு குட்டி (செம்பு கொட்டி), சோமாரி (சோம்பேறி), தோட்டி, நஞ்சுண்டெ (நஞ்சுண்டவன்), பிள்ளே (பிள்ளை), வேட்ட (வேடன்), குருக்குளு (குருக்கள்).

௪. முறைப் பெயர்

அஜ்ஜெ (அச்சன்), அம்ம (அம்மை), அத்தெ (அத்தை), அக்க.

௫. விலங்குப் பெயர்.

எடு (ஆடு), ஆனெ (ஆனை), பஞ்சி (பன்றி), எயிபஞ்சி (எய்ப் பன்றி), எர்மெ (எருமை), கடம (கடமை), காடி, கத்தெ (கழுதை), குதுரெ (குதிரை), குரு (குருளை), குறி (கொறி), நரி, நாய், பில்லி (புலி), மறி, மான், கஞ்சி (கன்று).

௬. பறவைப் பெயர்.

கொர்ங்கு (கொக்கு), கோரி (கோழி), பாவலி (வாவல்), காடெ (காடை).

௭. ஊர்வனவற்றின் பெயர்.

உடு (உடும்பு), எலி, ஓந்தி, சுண்டெலி, தேள், பாவு (பாம்பு).

௮. மரஞ்செடிப் பெயர்.

அடும்பு (அடம்பு), அர்த்தி (அத்தி), ஆம்பல், எண்மெ (எள்), கரும்பு, கொடி, ஜோள் (சோளம்), பாஜெ (பாசி), மஞ்சள், மர (மரம்), பாகெ (வாகை), வாரெ (வாழை), பேவு (வேம்பு).

**௯. தட்டுமுட்டுப் பெயர்.**

அடப்ப (அடைப்பம்), கர (கலம்), குப்பி, கூடெ (கூடை), சட்டி, ஜாடி (சாடி), செம்பு, ஜோளிகெ (சோளிகை), தொட்டி, தொட்டில், மேஜி (மேசை).

**௧௦. உணவுப் பெயர்.**

அப்ப (அப்பம்), அரி (அரிசி), உப்பு, ஊட்ட (ஊட்டம்), எண்ணெ (எண்ணெய்), கஞ்சி, கலி (கள்), கூளு (கூழ்), சாரு (சாறு), தீனி, நஞ்சு, புண்டி (பிண்டி), மர்து (மருந்து).

**௧௧. ஆடையணிப் பெயர்.**

கொப்பு, பாசி, வக்கி (வங்கி), சல்லண (சல்லடம்).

**௧௨. ஊர்திப் பெயர்.**

அம்பாரி, உஜ்ஜாலு (ஊஞ்சல்), ஓட (ஓடம்), கப்பல், தேரு (தேர்), தோணி.

**௧௩. கருவிப் பெயர்.**

அம்பு, அர (அரம்), இக்குளி (இடுக்கி), உளி, கத்தி, கம்பி, கவணெ (கவணை), கொக்கெ (கொக்கி), கோலு (கோல்), கோளி (கோலி), சட்டுக (சட்டுவம்), செண்டு (=பந்து), செண்டெ (செண்டை=ஓர் இசைக்கருவி), தித்தி, பகட (பகடை=தாயக் கருவி), பாரெங்கி (பாரை), பிர் (வில்).

**௧௪. இடப் பெயர்.**

அம்பில (அம்பலம்), அரு (அருகு), இடெ (இடம்), ஊட்டி (ஊற்று), கடலு, கடெ (கடை), காணி, குட்ட (குன்றம்), கொட்ய (கொட்டகை), கொட்டார, கொனெ (கொனை), சடலெ (சடலை), சுடுகாடு, தொளு (தொழு), தோட்ட, நடு, நாடு, பயல் (வயல்), பின்னு (விண்), கணி (கேணி), பட்ண (பட்டினம்), ஊரு (ஊர்), இல்லு (இல்), காடு.

**௧௫. காலப் பெயர்.**

கடு (கெடு), பொர்து (பொழுது).

**௧௬. சினைப் பெயர்.**

அடி, இமெ (இமை), எலெ (இலை), உகுரு (உகிர்), உமி, எலு (எலும்பு), ஓடு, ஓலெ (ஓலை), கண்ணு, கடெக்கண்ணு, கவ (கவை), காவு (காம்பு), காயி (காய்), காலு, கொரலு (குரல்=கதிர்), கை,

கொட்டாஞ்சி (கொட்டாங்கச்சி), கொட்டெ (கொட்டை), கொண்டெ (கொண்டை), கொம்பு, கெவி (செவி), தொண்டெ (தொண்டை), தோகெ (தோகை), நாலாயி (நாக்கு), நாரு (நார்), நெசலு (நுதல்), நெத்தி (நெற்றி), பீலி, மட்டெ (மட்டை), மூரெய் (மூலே), முள், மூக்கு, மோரே (முகரை), வித்து, பெதெ (விதை), பெரெல் (விரல்), கொம்மெ (கொழுப்பு), தோளு (தோள்).

### கஎ. பண்புப் பெயர்.

அல (அளவு), இக்கட்டு, ஒகர் (உவர்), எதுரு (எதிர்), ஹேரள (ஏராளம்), ஒய்யார, கார், கார (காரம்), காவி, குருடி (குருடு), கூனு, கொந்த்ர (கொஞ்சம்), சிட்டு, சுட்டி, உளுக்கு, சுருக்கு (=விரைவு), செடி (தீயநாற்றம்), சேரு (சேர்), சொட்டு (குற்றம்), சொத்த (சொத்தை), தப்பு, நய (நயம்), நரெ (நரை), நாத்த (நாற்றம்), நேரெ (நேர்), நோவு, முழம், மெருகு, மெலியுனி (மென்மை), மேரெ (மேரை), பண்டவால் (வண்டவாளம்), வரெட (வறடு), வெசெ (விசை), பெப்பு (வெப்பு), தாள்மெ (தாழ்மை), நம்பிகெ (நம்பிக்கை), பேனெ (பையுள்), கத்தலே (கருக்கல்), பொர்லு (பொற்பு):

### எண்ணுப் பெயர்.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஒஞ்சி | 50 | ஐவ |
| 2 | ரட்டு | 60 | அஜிப |
| 3 | மூஜி | 70 | யெள்ப |
| 4 | நாலு | 80 | யெண்ப |
| 5 | ஐனு | 90 | சொண்ப |
| 6 | ஆஜி | 100 | நூது |
| 7 | ஏளு | 101 | நூத்த வொஞ்சி |
| 8 | எண்ம | 102 | நூத்தரட்டு |
| 9 | ஒம்பத்து | 200 | இர்நூது |
| 10 | பத்து | 300 | முந்நூது |
| 11 | பத்தொஞ்சி | 400 | நாலுநூது, நானூது |
| 12 | பதுராடு | 500 | ஐநூது |
| 13 | பதுமூஜி | 600 | ஆஜிநூது |
| 14 | பதுநாலு | 700 | யேளுநூது |
| 15 | பதினைனு | 800 | யெண்மநூது |
| 16 | பதுனுஜி | 900 | வொர்ம்பநூது |
| 17 | பதுனேளு | 1000 | சார |
| 18 | பதுனெண்ம | 1001 | சாரத்த வொர்ஞ்சி |

| | | | |
|---|---|---|---|
| 19 | பதுனொர்ம்ப | 1100 | சாரத்த து |
| 20 | இர்வ | 10000 | பத்து சார |
| 21 | இர்வத்தொஞ்சி | 11000 | பத்தொஞ்சி சார |
| 22 | இர்வத்து ரட்டு | 100000 | லக்ஷ |
| 30 | முப்ப | 10000000 | கோட்டி |
| 40 | நால்ப | | |

எண்ணடி உயர்திணைப் பெயர்,

| தமிழ் | துளு | தமிழ் | துளு |
|---|---|---|---|
| ஒருவன் | வொரி | எண்மர் | யெண்ம மந்தெ |
| ஒருத்தி | வொர்த்தி | ஒன்பதின்மர் | வொர்ம்ப மந்தெ |
| இருவர் | இர்வெரு | பதின்மர் | பத்து மந்தெ |
| மூவர் | மூவெரு | பதினொருவர் | பத்தொஞ்சி மந்தெ |
| நால்வர் | நால்வெரு | | |
| ஐவர் | ஐவெரு | | |
| அறுவர் | ஆஜ்வெரு | | |
| எழுவர் | யேள்வெரு | | |

ஏழுக்கு மேற்பட்ட எண்ணடி உயர்திணைப் பெயரெல்லாம், எண்ணுப்பெயரொடு மந்தெ என்றும் தொகுதிப் பெயர் கூடியமையும்.

முறையெண்ணுப் பெயர்.

| தமிழ் | துளு | தமிழ் | துளு |
|---|---|---|---|
| ஒன்றாம் | வொஞ்சனெ | நாலாம் | நாலனெ |
| இரண்டாம் | ரட்டனெ | ஐந்தாம் | ஐனனெ |
| மூன்றாம் | மூஜனெ | பத்தாம் | பத்தனெ |

கஅ. தொழிற் பெயர்.

(1) முதனிலைத் தொழிற் பெயர்.
எ - டு: சுருள்.

(2) முதனிலை திரிந்த தொழிற் பெயர்.
எ - டு: ஈடு, கேடு.

(3) முதனிலை திரிந்து விகுதிபெற்ற தொழிற் பெயர்.
எ - டு: ஆட்ட (ஆட்டம்), ஓட்ட (ஓட்டம்).

(4) விகுதிபெற்ற தொழிற் பெயர்.
எ - டு. கொலெ (கொலை), சாவு, தீர்ப்பு.

**சில தொழிற் பெயர்கள்.**—ஒணகெலு (உணங்கல்), உளவு, எலமு (எலம்), ஒப்பந்த, நகலி (நகல்), நடட்பு நட்டி (நட்டல்=நடுகை), நெனப்பு (நினைப்பு), பக (பகை), புகா (புகழ்) காப்பு, பேலெ (வேலை), மதுமெ (வதுவை).

**கக. பல்பொருட் பெயர்.**

அலெ (அலை), உக்கி (உக்கம்), உண்டெ (உண்டை), உசுரு (உயிர்), இர்ளு (இருள்), ஓலக (ஓலக்கம்), கரி, காணிக்கெ (காணிக்கை), குத்த (குத்தகை), கூட்டு, கூவே (கூம்பு), கூலி, கொள்ளி, சிட்டிக்கி (சிட்டிக்கை), சில்லரெ (சில்லறை), சில்லு, சீட்டு, சூடி (சூடு=அரிக்கட்டுக் குவியல்), பொள்ளி (வெள்ளி), தீவட்டி, நூலு, படி, ஹனி (பனி), புண (பிணம்), புதேரு (பெயர்); புடி (பொடி) பொர்லு (பொருள்) மயெ (மயம்), மூரி, முரி (மூரி), வகெ (வகை) மிடெ (விடை), வெள்ளம், பை (வை=வைக்கோல்), ஆமெ (ஆமை), கல்லு, கின்னி (குன்னி), குட்டு, ஆணு, பொண்ணு, மாதெர (மாற்றம்).

**உ௦. வேற்றுமையேற்ற பெயர்கள்.**

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | யானு | அம்ம | மர | மேஜி |
| 2. | யென்னு | அம்மனு | மரொனு | மேஜினு |
| 3. | யெனட | அம்மட | மரட்ட | மேஜிட |
| 4. | யெங்கு | அம்மகு | மரொக்கு | மேஜிகு |
| 5. | யெனடுது | அம்மடுது | மரொடுது | மேஜிடுது |
| 6. | யென | அம்ம | மரத | மேஜித |
| 7. | யெனடு | அம்மடு | மரொட்டு | மேஜிட |
| 8. | — | அம்மா | மரா | மேஜியே |

**வினைச்சொல்**

**க. முக்கிய வினைகள்.**

அண்ட்டு (அண்டு), அண்ணு, அபய் (அவை), அலம்புனி (அலம்பு), அலர், அர்பினி (அழு), ஆடு, ஆய், ஆர்க்குனி (ஆர்=ஒலி), ஆரு (ஆறு), இடு, இழி (=இறங்கு), உடெ (உடை), உதர் (உதிர்), உப்ப, உப்பி (உமிழ்), ஒதெ (உதை), உரி (ஒலி), உரெ (உரை) உள்கு (உளுக்கு), ஊட் (உழு), ஊது, எக்கு, எதுருந்து (எதிர்), எய், எரி, எறு, ஒட்டு, ஒடி, ஓடு, ஓது, கக்கு, கட்டு, கடப்பு, கடெ (கடி), கப்பு, காகு (கரை), கல், கல, கலங்கு, கபி (கவி), காதுனி (காது), காயி (காய்), குட்டு, குத்து, குரி (குறி), கூடு, கேண் (கேள்), கொணுனி (கொள்), கொதி, சாய் (சா), சுடு, கொன் (கொல்), சுத்து (சுற்று),

சேரு (சேர்), ஞாந்த (நீந்து), தப்புனி (தப்பு), தாளுனி (தாளு), தித்துனி (திருத்து), துலுக்கு (துளும்பு), தெரி, தொடகுனி (தொடங்கு), தோடுனி (தோண்டு), தோல்கு (தொலே), நல்குனி (நக்கு), நடப்புனி (நட) நட்பினி (நடு), நடுகுனி(நடுங்கு), நம்பு, நாடுனி (நாடு), நூக்குனி (நூக்கு), படிப்புனி (படி), பர்பு (பருகு), புட்டு (பிற), பூரு (வீழ்), பெதரு (விதறு), பெரசு (விரவு), பொதெ (புதை), போடு (வேண்டும்), மாய், முகி (முடி), முளெ (முளே), மெச்சுனி (மெச்சு), மெசெலு (மேய்), வரு (வற்று), வாழு, வெதரு (விதிர்).

உ. **புணர்வினே.**

காத்தொனுனி (காத்திரு), செண்டாடுனி (செண்டாடு) முதலியன.

௩. **துணைவினே.**

ஆபினி (ஆகு), உப்புனி (உள்), இப்புனி (இரு), தீர், தெரி, கூடு, கொணு (கொள்), உண்டு முதலியன.

௪. **வினைப்புடை பெயர்ச்சி.**

கேணு (கேள) என்னும் வினே

| | | | | |
|---|---|---|---|---|
| ஏவல் | ஒருமை | — | கேண்ல | (கேணு) |
| | பன்மை | — | கேணுலெ | (கேண்லெ) |

| முற்று | இ : கா | நி : கா | எ : கா |
|---|---|---|---|
| யான் | கேண்டெ | கேணுவெ | கேணும்பெ |
| யாம் | கேண்ட | கேணுவ | கேணும்ப |
| நீ | கேண்ட | கேணுவ | கேணும்ப |
| நீர் | கேண்டரு | கேணுவரு | கேணும்பரு |

**இறந்தகால நிறைவு (Pluperfect)**

| | | | | |
|---|---|---|---|---|
| (யான்) | கேட்டிருக்கிறேன் | | — | கேணுடித்தெ |
| (யாம்) | ,, | றோம் | — | கேணுடித்த |
| (நீ) | ,, | றாய் | — | கேணுடித்த |
| (நீர்) | ,, | நீர் | — | கோணுடித்தரு |

**தொழிற்பெயர்.—கேணெண்டு (Gerund)**

**வினையாலணையும் பெயர்**—இ - கா. கேண்டினெ (கேட்டவன்)
நி - கா. கேணுனெ (கேட்கிறவன்)
எ - கா. ,, ,,

இடைச்சொல்.

வியப்பு —ஆஹா, ஓ, ஓஹோ, அப்ப.

இரக்கம்.—அய்யோ, அய்யப்ப.

வெறுப்பு.—ஹே, சீ, சீச்சீ.

வினு.—ஆ, ஞ, ஏ, யேனி? (என்று?).

சுட்டு.—ஆ, ஆத், ஆனி (அன்று) அடெ (ஆண்டு), அவுளு (அவண்).

இடம்.—கைதளு (கிட்ட), முட்ட (கிட்ட), மித்து (=மேல்) உளயி (உள்), பிடயி (வெளி), சுத்த (சுற்றும்), யெதுரு, பிரவு (பிறகு),

காலம்.—கடெச (கடந்து), பேக (வேகம்).

படி.—மெல்ல, நிடுப (நெடுக்க), வொட்டுகு (=கூட) ஒப்ப.

தேற்றம்.—ஏ (ஈயெ).

தொடர்ச்சொல்.—அக்கக்க (அக்கக்காய்), சுத்த முத்த (சுற்று முற்றும்), ஆணுபிலி, நீருகுட்ட (dropsy), அடிமேலு. முதலியன.

சொற்றொடர்.

அரசு ஆளுவெ = அரசன் ஆள்கிறான். கடலு மல்லெ ஆதுண்டு = கடல் பெரிதாயிருக்கின்றது. யென குதுரெகு நினகுதுரெ மல்லெ = என் குதிரைக்கு நின் குதிரை பெரிது. ஆயெ தனனு தானெ ஹாக்கொண்டெ = அவன் தன்னைத் தானே அடித்துக் கொண்டான்.

மல் = பருமை. மல்லல் = வலி. "மல்லன் மழவிடையூர்ந் தார்க்கு" (சிலப். 17, கொளு, 3). மல்கு = மிகு. மல்லல் = மிகுதி (சூடா). "மல்லல்வளனே" (தொல். சொல். 303).

பழமொழிகள்.

உப்பு திந்திநயெ நீரு பர்வெ = உப்புத் தின்றவன் நீர் பருகு கிறான்.

கர்ம்பு சீபெ அந்து து பேரு முட்ட அக்கியட = கரும்பு தீவிய தென்று வேர் முட்டத் தின்னக்கூடாது.

கரும்பு இனிக்கிறதென்று வேரோடு தின்னலாமா? (தமிழ்)

தானு களுவ ஆண்ட ஊரு களுவெகெ = தான் கள்ளனானல் ஊருங் கள்ளனும்.

தான் திருடி அசலை நம்பான். (தமிழ்)

பஜெ இத்தினது காரு நீளொடு = பாயிருக்கிற அளவு கால் நீட்டவேண்டும்.

பல்லடு குள்ளுது பாண்டு பத்தியெ=பள்ளத்திற் குந்திக் குட்டி (அரை)த்தவளையைப் பிடித்தான். பறழ் - பாண்டு (?)

மல்ல புதெ மெல்ல ஜாவொடு=மல்ல (பெரிய) பொதியை மெல்ல இறக்கவேண்டும்.

தன தரெகு தன கை—தன் கையே தனக்குதவி. (தமிழ்)

காலொகு தக்க கோல, தேசொகு தக்க பாஷெ, தாளொகு தக்க மேள=காலத்துக்குத் தக்க கோலம், தேசத்துக்குத் தக்க பாசை, தாளத்துக்குத் தக்க மேளம்.

ஆண்டெத பாயி கட்டேலி தாண்டெத பாயி கட்டேல்யா ?= அண்டாவாயைக் கட்டலாம் தொண்டை வாயைக் கட்டலாமா ?

உலைவாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியாது. (தமிழ்)

காடு சொர்க்கினவளு எடுனு புடொடு, ஊரு சொர்க்கினவளு கொங்கணனு புடொடு=காடு சொக்கினவழி (தழைத்த விடத்து) ஆட்டை விடவேண்டும், ஊர் சொக்கினவழி கொங்கணனை விட வேண்டும். சொக்குதல் - அழகாயிருத்தல், மயக்குதல்.

நலிபெரெ திரியந்தினுகு ஜாலு வோரெகெ=நடஞ் செய்யத் தெரியாதவனுக்கு நிலஞ் சமனில்லை.

ஆடமாட்டாத தேவடியாள் கூடங் கோணல் என்றாளாம். (தமிழ்)

நாயித பீல வோண்டெடு பாடுண்ட சம ஆவா ?=நாயின் வாலைக் குழாய்க்குள் விட்டாலும் சம மாகுமா ?

நாயின் வாலை மட்டை வைத்துக் கட்டினாலும் நேராகுமா ? (தமிழ்)

பிஜினுகு தாயெகு கர்பத பேலெ?=எறும்புக்கு எதற்கு இரும்பு வேலை.

இரும்படிக்கிற இடத்தில் ஈக்கு என்ன வேலை ? (தமிழ்)

பாயிடு மக மக பஞ்சிடு பக பக=வாயில் மகன் மகன் வயிற்றில் பகை பகை.

உதட்டில் உறவும் உள்ளே பகையும். (தமிழ்)

பெரிகு பூரி பெட்டுலா கர்பொகு கொரி நீருலா பிர பருவா ? =பிறக்கு (முதுகு) விழுந்த அடியும் இரும்பு கொண்ட நீரும் பிறகு (திரும்ப) வருமா ?

மாதிக இல்லுடு உணசு ஆண்ட ப்ராணகு தானெ ?=பறையன் இல்லில் உணவானால் பார்ப்பானுக்கு (பிராமணனுக்கு) என்ன?

### துளு திரியக் காரணங்கள்

(1) தட்ப வெப்பநிலை.
(2) இலக்கண நூலின்மை.
(3) தமிழொடு தொடர்பின்மை.
(4) துளுவர் தமிழ்நூலைக் கல்லாமை.
(5) வடசொற் கலப்பு.
(6) ஒலிமுறைச் சோம்பல்.

### துளு திரிந்த வகைகள்.

(1) ஒலித்திரிபு.
எ. டு: ழ - ள, கூழ் - கூளு, ச - ஜ; பாசி - பாஜி.
(2) போலி.
எ. டு: ஐ - எ, காடை - காடெ; ழ - ர, கோழி - கோரி; வ - ப, வேலை - பேலெ.
(3) சொற்றிரிபு.
எ. டு: பன்றி - பஞ்சி, ஆறு - ஆஜி.
(4) ஈறுகேடு.
எ. டு: குசவெ (குசவன்), இருபது - இர்வ.
(5) இலக்கணப் போலி.
எ. டு: யாவது - தாதவு.
(6) ஈறுமிகை.
எ. டு குருக்கள் - குருக்குளு, வாவல் - பாவலி.
(7) தொகுத்தல் திரிபு.
எ. டு: திருத்து - தித்து, கரும்பு - கர்ம்பு.
(8) கொச்சை.
எ. டு: சுற்றும் - சுத்த, பற்று - பத்து, புது - பொசெ.
(9) புணர்ச்சியின்மை.
எ. டு: நீரு குட்ட.
(10) வழக்கற்ற சொல் வழங்கல்.
எ. டு: உணங்கு - ஒணகு, மல்ல=பெரிய.
(11) புதுச்சொல் லாக்கம்.
எ. டு: ஹொட்டகச்சி=பொறாமை.
(12) சொல்வடிவ வேறுபாடு.
எ. டு: இங்கு - இஞ்சி.
(13) வடசொல் வழக்கு.
எ. டு: பாஷெ, பாபி (பாவி), சங்கட, மார்க.

(14) றகர ணகரங்கள் வழங்காமை.

(15) நெடுஞ்சுட்டு வழக்கு வீழாமை.
எ-டு. ஈ நரமானி = இந்நரன்.

## முடிவு

இதுகாறுங் கூறியவற்றால், தமிழல்—திரவிடமொழிகள் உயிரும் உடம்பும் போன்ற அடிப்படையும் முக்கியமுமான பகுதிகளிலெல்லாம் தமிழேயென்றும், ஆடையும் அணியும் போன்ற மேற்புறணியில் மட்டும் ஆரியந்தழுவினவென்றும், அவ்வாரியமும் (அவை) தமிழைத் தழுவுங்கால் வேண்டாததேயென்றும், வடமொழியைத் தமிழல்—திரவிடத்தின் தாயெனக் கூறுவது பெரியதோர் ஏமாற்றமென்றும் தெரிந்துகொள்க.

திரவிடச்சொற்களுட் சிலவற்றின் இயற்கை வடிவம் தமிழல்—திரவிடமொழிகளிலேயே இருப்பதுண்மையாயினும், அவை மிகமிகச்சிறுபான்மைய வென்றும், அதுவுங் குடியேற்றப் பாதுகாப்பின்பாற் படுமென்றும் நூற்றுக்குத் தொண்ணூறு வீதம் திரவிடச்சொல்வேர்கள் தமிழிலேயே உள்ளனவென்றும் அறிதல் வேண்டும். தமிழல்—திரவிடமொழிகளின் மூவிடப்பெயரும் எண்ணுப்பெயருமே இவ்வுண்மையைத் தெரிவிக்கப் போதிய சான்றாகும்.

குடியேற்றப் பாதுகாப்பான ஒரு சிறு பகுதியால் தமிழின் தாய்மை குன்றிவிடாது. சில சூழ்ச்சியப்பொறிகளின் பழைய அமைப்புக்கள் இன்று கீழ்நாட்டில் தான் உள்ளன. இதனால்; மேனாட்டார் கீழ்நாட்டாரிடமிருந்து பொறிக்கலையைக் கற்றார் என்றாகாது. இங்ஙனமே குடியேற்றப் பாதுகாப்பும்.

தமிழ் வாழ்க.